எமது புத்தக ! ள.



1. தாருல் இ மபு த லை
16 17 க்கி ' டு லை ' பீச் செ ' னை

2. தேச மித்திர புத்த சாலை,
P. O. Box 126, செ ' னை.

3. எம. ஏ. ஷாஹ லஹமீ & ஸ ' '
10 ஹரோட் திரு ல்லிக்கேணி, சென்னை.
1 ஹாஜீலேன் சி ' கப்பூர்.

4. வீ தா புத்த ச லை
121 122, ' ாசி வீதி இர ' கூ '.

5. பகு ச ' தி புத்த சாலை
40 28 து தெரு இர ' கூ '

முதலி பல இட ' , ளிலு கிடைக்கு .

## பிஷய சூசிகை .



# தாருல் இஸ்லாம்

## இஃதோர் உயர்தர நூதன இஸ்லாமிய முதற்றர மாதாரமபச் செந்தமிழ்ப் பத்திரிகை.



தமிழ் நாட்டுச் சகோதர சகோதரிகாள். "தாருல் இஸ்லாம்" இன்னதென்பதை இது வரையில் நீங்கள் தெரிந்து கொண்டிருக்கிறீர்களா?

இஸ்லாத்தின் உண்மைக் கொள்கைகளை யெல்லாம் உள்ளபடியே நீங்கள் உணர்ந்துகொள்ள வேண்டாமா? குர்ஆன் ஷரீபிலும் ஹதீது ஷரீபிலும் கூறப்பட்டிருப்பது இன்னதெனத் தெரிந்து கொள்ள வேண்டாமா? இஸ்லாத்திலுள்ள ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை இன்னதென அறிந்துகொள்ள வேண்டாமா? இஸ்லாத்தின் சரசக்கொள்கை இன்னதென்பது உங்களுக்குத் தெரியுமா? இஸ்லாத்தின் தேசீய ராஜீய ஞானமும் இன்னதெனத் தெரிந்துகொள்ள வேண்டாமா? முஸ்லிம் உலகமுழுதும் நடை பெறும் முக்கியமான விஷயங்கள் இன்னவையென அறிந்துகொள்ள வேண்டாமா? இஸ்லாத்தில் இது வரையில் தோன்றியுள்ள பெரியோர் களின் சரித்திரத்தையு ங்க ள் படித்தறிய வேண்டாமா?

இவை யெல்லாம் வே ண்டுமாயின் எமது "தாருல் இஸ்லா த்தைப் படியுங்கள். இதன் முதற்பக் முதல் இறுதிப் ப க வ ர யில் அதிரஸமான அபூர்வ விஷயங்களே முழுது ததும்பி இட கும். இ லாத்தின் பக்தி மார்க்கமும் ஞான மார்க்கமு இ இன்ன யென்ப தயும் இதன் மூல செவ் னே தெரிந்து கொ ளுவீர்கள்.

இதில் குர்ஆன் ஷரீபின் மொழி பெயர்ப்பும் இப்பொழுது தொ ர்ச்சியாக வெ ளி வந்து கொ டிருக்கிறது.

இந் ருஷ சநதா ந . மா ர க்த ந 2.

வெ ளிநாட்டிறத 4. தனிப்பிரதி விலை அணு 4.

விலாச :

மாே ர் 'தாருல் இ லாம் ஆபீ
16 17 டு லே பிச் ரா .

# முகவுரை



நாயகமான்மியம்" என்றொரு நபிகள் பெருமானின் சரித்திர மொன்று எழுதவேண்டுமென்று எமக்கோர் ஆர்வம் நெடுநாளாகவே தழைத்தோங்கி வந்தும் இன்றளவும் குர்ஆன் ஷரீபின் மொழி பெயர்ப்பானது அதிதுரிதமாக நடைபெற்று வருவதால் அந்த "நாயகமான்மியமே லையானது சிறிது தடைபட்டு நிற்கின்றது. ஆயினும் நபிகள் நாயகத்தின் சரித்திரமும் அவர் ளுடைய தோழர்களுள் முதன்மையான முக்கிய கலீபா களின் சரித்திரமும் இக்காலத்துக்கு இன்றியமையாதவை யெனக் க டு இப்பொழுது இச்சிறுநூலை முதன் முதலா எழுதி வெளியிட முன்வந்தோம். இச்சிறு நூலில் அ ர்களுடைய ஜீவிய சரித்திரமும் ராஜீய நிலையொழு கும் பூர்த்தியா வருணிக்க முடியாமற் போயினும் ஆரம்பமா அன்னாரின் விஷய ளில் இற குவோர் அறிந்துகொள்ள வே டிய அ சியமான குறிப்பு களெல்லாம் விடாமல் இதில் நுழைப்பட்டிரு கி றன. மேலும் இனி எம்மால் வெளிவர இரு கும் 'நாயகமா மியம் என்னும் விஸ்தாரமான நூலு கும் இ ொரு முகவுரைபோல் விள கி ருமெ றும் நினைத்து இதை இப்பொழுது எழுதி வெளியிட்டிரு கிறோம். இன்னும் கிலாபத் பிரச்னையானது மி மும்முரமா நடந்து ரும் இ ாலத்தில் அந்த "கிலாபத் தி ஆரம்ப ால ாழ் ை யானது எவ் ாறு இருந்து ந்ததெ றும் அ ாலத்திய மு லிம் குடியாசா து எவ் ாறு

நிலைநிறுத்தப்பட்டிருந்ததென்றும் தெரிந்துகொள்ளுதற்கும் இச்சிறு நூலானது பயன் படுமென்றும் எண்ணியிருக்கிறோம். ஆயினும் (ஆண்டவன் நாடுவாராயின்) குர்ஆன்ஷரீபின் மொழிபெயர்ப்பானது ஒருவாறு முடிவடைந்த பின்னர் "நாயகமான்மிய' மானது மிகவிரிவாக வெளியாகுமென்று எதிர் பார்த்திருக்கிறோம் (எல்லாவற்றிற்கும் அல்லாஹ் போதுமானவன்).

நபிகள் நாயகத்தின் சரித்திரத்தையும் அவர்களுக்குப் பி ர வந்த "குலபாயிராஷிதீன்' களுடைய சரித்திரங்களையும் அவர்களுடைய ராஜ்யபரிபாலன முறையையும் அக்காலத்திய தேசவளா விவரங்களையும் தெரிந்து கொள்ள வேண்டுமாயின் அக்காலத்திய பூகோள சாஸ்திரமானது அவசியமாயிருப்பதைக் கண்டு இதனு ன் ஒரு தேசப் படமும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதன் உதவியைக் கொண்டு இந்நூலிலுள்ள ஸ்தல விவரங்களை ஒருவாறு ஒவ்வொருவரும் நன்கு தெரிந்துகொள்ளலா மென்றெ ணுகிறோம். இஃதொரு மி ச்சிறு நூலாதலின் இதில் இன்னமும் சேர்க்கப்பட வேண்டிய பல பெரிய விஷய கள் இருக்கலாம்; மற்றும்பல குறைகளும் இதில் ா ப்படுதல் கூடும். ஆயினும் குற்றத்தை நீக்கிக் குணத்தை யேற்பதே பெரியாரின் செய்கையாகும். மற்றும் பல்லோர் இத்தகைய நூல்களை எழுத முன்வருதற்கும் இஃதொரு தூ ரடுகோலா யிருக்குமென் றெதிர்பார் கிறோம்.

ஷ கி டுலேன் பீச், செ னை.

பா. தாவுத்ஷா
1 12 3

بلغ العلى بكماله ❊ كشف الدجى بجماله

حسنت جميع خصاله ❊ صلوا عليه وآله

# வமசவழிப்படடி.

பிஹ்ர்

ஙலிப்

அல்லு

அப்

கத்தாப்

முர்ரா

உமர்
(2 து கலீபா) அபூகுஹாபா

இ ாப்

அபூபக்கர்
(முதல் கலீபா)

கு ை

அப்துத்தார்

அப்துமனாபு

அப்துஷ ஷம்ஸ்

ஹாஷிம்

உமையா

அப்துல் முத்தலிப்

அபுல் ஆஸ்

ஹர்ப்

அபூத்தாலிப் அப்பாஸ் அப்துல்லா

(Affan) அப்பான். அபூஸுபியான்.

அலீ
(4 து கலீபா)
(இ ர் பாத்திமாவை வி ா ம் செய்துகொண்டார்.)

அப்துல்லா. முஹம்மத் (ஸல்)

உதுமான்
(3-வது கலீபா)

முஆவியா

எஜீத்

பாத்திமா

N. B. இதில்.........இம்மாதிரியான புள்ளியிட்ட கோடானது இடையில் சில தலை முறைகளின் பெயர் விடப்பட்டிரு 'கிற தென்பதை ' ாட்டும்.

# குர்ஆன் ஷரீபு

## தமிழில் வெளியாய் வருகிறது.

### இதுவரை இம்மாதிரி கிரந்தம் பார்த்திருக்கமாட்டீர்கள் !

*செந்தமிழில் குர்ஆனும் அதன் விரிவுரையும் வெளியாவது இதுதான் முதல்தடவை. முஸ்லிம்களுக்கும் அல்லாதாருக்கும் இஃதோர் அத்தியாவசியமான வேத புத்தமாம். இதனை ஒப்பதும் மிக்கதும் வேறொன்றுமில்லை; இதைக் கையிலெடுத்தவருக்கே இப்பெருமை விளங்கும். விலை விவரங்களுக்கு எமக்கு எழுதிக்கொள்ளலாம். சில பிரதிகளே அச்சாகின்றன. சீக்கிரம் செலவழிந்துவிடும்; ஆதலின் முந்துங்கள் ! முந்துங்கள் !!*

இ. அப்துர் றஹ்மான்
16-17, ஸக்கின்டு லேன் பீச்,
சென்னை,

بسم الله الرحمن الرحيم

نحمده و نصلى

நபிகள்

# நாயகமும் நான்கு தோழர்களும்

## அத்தியாயம்- 1.



### அரபுநாடும் ஆதிகாலமும்

நமது நபிகள் நாயகம் முஹம்மது முஸ்தபா ஸல் லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்களின் ஜீவிய சரித்திரத்தின் உண்மையான சீரையும் சிறப்பையும் அறியப் புகுமுன் அவர்கள் இவ்வுலகில் அடைந்திருக்கும் வெற்றி இத்தன்மைத் தென்று தெரிந்துகொள்ள வேண்டுமாயின் அவர்கள் திருவவதாரம் செய்தநாடு அங்கு அவர்கள் காலத்துக்கு முன்னிருந்த மதக்கொள்கை, அரசு நிலை ஒழுக்கு முதலியவற்றைப்பற்றி நாம் சிறிது தெரிந்து கொள்ள வேண்டியது அத்தியாவசியமாகும். பூர்வகாலமுதல் ஈஸவி 6-வது நூற்றாண்டு வரையிலுள்ள ஆயிரக்கணக்கான தலைமுறைக்காலம் ரையில் ஆசியாகண்டத்தின் தென் மேற்கு

மூலையில், மேற்கில் செங்கடலாலும் தெற்கில் இந்து மஹா சமுத்திரத்தாலும் கிழக்கில் பாரஸீகக் குடாக்கடல் ஓமான் குடாக்கடல் இவற்றாலும் சூழப்பட்டு வடக்கில் பாபிலோனியா ஸீரியா (ஷாம்) ஆகிய இந்நாடுகள் வரையில் அகன்றிருக்கும் தேசமாகிய அரபு நாடு* மட்டும், ஆசியாவின் மேல்பாகமும் ஆபிரிக்கா ஐரோப்பா கண்டங்களின் மத்திய பாகமும் பற்பலவிதமான மாறுதல்களை அடைந்து வரும் போதும் ஒரு சிறிதும் சலனமில்லாமல் ஒருதன்மைப் பட்டதா யிருந்து வந்தது. ராஜ்யங்களும் தேசங்களும் புதிது புதிதாகத் தோன்றி மறைந்து கொண்டிருந்தன. பழயராஜ பாம்பரைகள் ஒழிந்தும் புதிய பரம்பரைகள் தோன்றியும் வந்தன. தேசங்களின் எல்லைகளும் பெயர்களும் மாறிக் கொண்டிருந்தன. பற்பல தேசவாசிகள் அடியோடு அழிக்கப்பட்டும் அடிமைகளாக ஆக்கப்பட்டும் வந்தார்கள். இன்னும் அரபுநாட்டைச் சூழ்ந்துள்ள எல்லைப்புற நாடுகளில் எண்ணிறந்த மாறுதல்களெல்லாம் ஏற்பட்டுக்கொண்டிருந்த போதிலும் அரபுநாடுமட்டும் அசைவற்றிருந்தது. இந்நாட்டிலுள்ளாரோ அங்குமிங்கும் பிரயாணம் செய்து கொண்டு தங்களுடைய புருஷ கம்பீரமான தோள்களை அடிமையென்னும் நுகத்தடியின் கீழே தாழ்த்திக்கொள்ளாமல் பழயகாலப் பழக்க வழக்கங்களையே அனுஷ்டித்தவர்களாய்ச் சுயேச்சையோடு வாழ்ந்து வந்தார்கள். ஆனால் நம்முடைய நபிகள் நாயகமவர்கள் திருவவதாரம் செய்யும் போது அரபுநாட்டின் பெரும்பாகம் வேறு தேசமன்னரின் கீழ் அடங்கிக் கிடந்தது.

பிரான்ஸ் தேசத்தைப் போன்ற அவ்வளவு விஸ்தீரண

* இந்நாடானது தௌராத் முதலிய பழய வேதங்களில் பாரான் தேசமென்று வழங்கப்படுகிறது.

முள்ள இத்தேசமானது பூசாரத்திலும் சீதோஷ்ண நிலைமையிலும் ஜனத்தொகுதியின் தோற்றபேதத்திலும் ஒன்றுக்கொன்று மாறுபட்டிருக்கக்கூடிய பலமாகாணங்களாகப் பிரிந்துகிடக்கிறது. இபுரானியா பாஷையிலிருந்த தௌராத்து வேதத்தில் குறிப்பிட்டிருக்கும் ஏதோமியர்களும் மிதியானியர்களும் பண்டைக்காலத்தில் ஜீவித்து வந்த மலைப்பிராந்தியமானது அரபுநாட்டின் வடபாகத்திலிருந்து வருகிறது; அதற்கப்பால் ஹிஜாஸ் என்னப்படும் தேசமானது அமைந்திருக்கிறது. புராதனகாலத்தில் யதுரிப் என்று வழங்கப்பட்டுவந்து பிறகு நம்முடைய நபிபெருமான் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் அங்கே சென்று குடியேறிய பின் மதீனமாநகரென்று வழங்கப்பட்டுவரும் அந்தப் பெயர்வாய்ந்த பட்டணமும், நபிகள் நாயகமவர்களின் திருவவதார ஸ்தலமாகிய மக்கமாநகரும், ஹஜ்ஜுக்குச் செல்லும் முஸ்லிம் யாத்திரிகர்கள் சென்றிறக்கும் துறைமுகமாகிய ஜித்தாவென்னும் பட்டணமும் இந்த ஹிஜாஸ் தேசத்தில்தான் அமைந்திருக்கின்றன. இந்த ஹிஜாஸ் தேசமானது ஸூயெஸ் சந்தியிலிருந்து இந்து மஹாசமுத்திரம் வரையில் பரவியிருக்கக்கூடிய மலைத் தொடருக்கும் செங்கடலுக்கும் இடையில் தெற்குவடக்கில் நீண்டிருக்கிறது. அரபுநாட்டின் தென்மேற்கு மூலையிலுள்ள தேசத்துக்குத்தான் எமன் தேசமென்று பெயர். ஹிஜாஸின் தென்பாகத்திற்குத் திஹாமா என்று பெயர் சொல்வர்; இதில் எமன் தேசத்தின் பகுதியும் சிறிது கலந்திருக்கிறது. எமன் தேசத்துக்குக் கிழக்கில் இந்துமஹா சமுத்திரக் கரையோரத்தில் அமைந்திருக்கும் பகுதிக்குத்தான் ஹழ்ரமௌத் என்று பேர்சொல்வது வழக்கம்; இதன் கிழக்கே நெடுந்தூரத்தில் உமான் குடாக்கடலோரத்தில்

உமான் என்னும் தேசம் அமைந்திருக்கிறது. ஹிஜாஸ் மலைத்தொடரிலிருந்து கிழக்கே பாரஸீக குடாக்கடலி லிருக்கும் அல் அஹ்ஸா, அல்பஹ்ரைன் ஆகிய இடங்களுக் குச் சமீபத்திலுள்ள பாலைவனம்வரையில் அகன்றிருக்கும் மேட்டு நிலத்துக்கு நஜத் என்று பெயர் சொல்லப்படுகிறது. இந்த நஜதென்னும் பிராந்தியத்தில் மலைகளும் குகைகளும் மணல் வெளிகளும் ஆங்காங்கே காணப்படுகின்றன. இன் னும் குளிர்ச்சியான சோலைகளடர்ந்த நீர்த்துறைகளும் அடி க்கடி காணப்படுவதுண்டு. இப்படிப்பட்ட இடங்கள்தாம் அந்தப் பாலைவனத்தில் அலைந்துதிரியும் வனவாசிகளுக் கொரு பத்திரமான ஸ்தலமாயிருக்கின்றன. ஐரோப்பா யுத்தத்துக்கு முன்வரையில் ஹிஜாஸ்தேசமும் எமன் தேச மும் துருக்கியின் ஆட்சியின் கீழ் அமைந்திருந்தன. நஜத் பிராந்தியமானது ஒருதனியரசால் ஆளப்பட்டு வருகிறது. ஆனல் உமான் தேசமானது முஸ்கட் தேசத்தின் சுல்தா னுடைய ஆளுகையி லிருக்கிறது.

இந்தப் பெரிய தேசமாகிய அரபு நாட்டில் பெரிதான நதி யொன்றுமில்லை. அங்கங்கே காணப்படும் சிறு சிறு சிற் ருறுகள்தாம் இத் தேசத்துக்குச் சிறிது பசுமையைக் கொடுக்கின்றன. அங்கே மழையென்பது மகா அபூர்வமாயி க்கும்; அத்தேசத்திலுள்ள ஆகாயமானது எப்பொழுதும் உலர்ந்து வறட்சியாகவே யிருக்கும். ஆனல் போதுமான ஜல வசதியுள்ள சிற் சில இடங்களில் மட்டும் சுகாதார மானது சிறிது சௌகரியமுள்ளதாய்க் காணப்படும். ஆயி னும் நீர் வளமுள்ள இடங்களில் மட்டும் நிலவளமும் அதி கமாகவே காணப்படுகின்றது. எமன் தேசத்திலுள்ள ஜிபா லுல் எமன் என்றழைக்கப்படுகின்ற மேட்டு நிலமானது

அதிக உயரமாயிருக்கிறது. அதில் மிக விசாலமான நீர் வளம் பொருந்திய பள்ளத்தாக்குக்களும் அநேக மாயுண்டு.

செங்கட லிலிருந்து ஐம்பது மைல் தூரத்திலும் ஜபல் குராவின் கருங்கற்பாறைகளிலிருந்து முப்பது மைல் தூரத்திலும் மக்கமா நகரைச் சூழ்ந்துள்ள ஹிஜாஸின் பகுதியானது சமபூமியா யில்லாமல் காடுமுரடான கற்பாறையாயிருக்கிறது. சூரியவெப்ப முழுமையும் மகா கொடுமையுடன் பிரதிபிம்பித்துக் காட்டக்கூடிய வெறுங் கருங்கற் பாறைகளும், ஆடுமாடுகளுக்குப் போதுமான பசும் புற்களையும் விளைவித்துக் கொடுக்காத பாலைவனங்களாகிய பள்ளத் தாக்குக்களும், எப்பொழுதும் உலர்ந்து கிடக்கும் ஓடைகளும் இப்பூபாகத்தில் மிகுந்திருக்கின்றன. இப்படிப்பட்ட விதமாய் உலர்ந்து வெப்பமடைந்திருக்கும் வறண்ட பூமிக்குக் கிழக்கே சிறிது தூரத்தில் பசும்புல் நிறைந்து பழ மரங்களாலும் பல விருக்ஷங்களாலும் அலங்கரிக்கப் பட்டுப் பற்பல விதமான சாக பதார்த்தங்களையும் இலந்தை அத்தி திராக்ஷை மாதுளை வாதுமை முதலிய பழ வர்க்கங்களையும் விளைவிக்க் கூடிய ஒரு குளிர்ந்த பாகமுண்டு. இதற்குப் பெயர் தாயிபு என்று கூறுவர்.

இப்படிப்பட்ட அரபுநாட்டில் பல்வேறு காலங்களில் பல் வேறுவிதமான ஜனங்கள் வசித்து வந்திருக்கிறார்கள். அரபிகள் தங்களுடைய பூர்விக பரம்பரையானது அநேக மாயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருந்து தொடர்ந்து வருவதாகப் பெருமை பாராட்டிக் கொள்ளுகிறார்கள். பூர்வ காலத்தில் உண்டான மகா வெள்ளத்துக்குப்பின் நூஹ் அலை ஹிஸ்ஸலாம் அவர்களின் புத்திரரான ஷாம் அலை ஹிஸ்ஸலாம் அவர்களுடைய பரம்பரையினின்றும் அரபிகளின் முக்கிய வர்க்கங்களாகிய ஆதின் வம்சத்தார்களும்

தமூதின் வம்சத்தார்களும் தோன்றினார்களென்று கர்ண பரம்பரையான சரித்திரமானது இன்றைக்கும் வழங்கி வரு கின்றது. இந்தப் பூர்வ வர்க்கத்தாரெல்லோரும் தங்களு டைய பாபமிகுதியால் பழய காலத்தில் அழிக்கப்பட்டுப் போயினர்; குர் ஆன் ஷரீபில் இவ்விஷயம் விளக்கமாகக் காணப்படுகின்றது. இவர்களைக் கீழ் நாட்டுச் சரித்திரங்க ளில் "புராதன அரபிகள் என்று வழங்கி வருகிறார்கள்.

இன்னும் பண்டைக் காலத்தில் ஜீவித்திருந்த ஷால்டி யர்களைப் போன்ற அதே வர்க்கத்தைச் சார்ந்த ஒரு வகை ஜாதியாரும் இந்த அரபு நாட்டில் ஆதிகாலத்தில் குடியி ருந்து வந்தார்களென்று தேச சரித்திர நூலாசிரியர்கள் கூறுகின்றனர். அவர்கள் அந்தேசத்தில் அதிகமான நாக ரிகத்தை அடைந்திருந்தார்கள்; அவர்களுடைய நாகரிகத் தின் சின்னங்கள் இன்னும் அரபு தேசத்தின் தென்பாகத் தில் காணப்படுகின்றன. அவர்களுடைய நாகரிகமும் நல்ல ரசும் அக்காலத்தில் மெஸொபொட்டேமியா எகிப்து முத லிய நாடுகள் வரையில் பரவியிருந்ததென்று பலர் அபிப் பிராயப் படுகின்றனர். அவர்கள் அக்காலத்தில் அதிக பிரம் மாண்டமான ஆலயங்களையும் மாளிகைகளையும் நிர்மாணித் திருந்தார்கள். அதன் என்னும் கடற்றுறைப்பட்டினத்துக் கருகிலுள்ள அழகிய குளங்களெல்லாம் அவர்களாலேயே வெட்டப்பட்டிருக்க வேண்டுமென்று சரித நூலாசிரியர் கள் அபிப்பிராயப் படுகின்றனர்.

புராத்து நதிக்கரைக்குக் கிழக்கேயுள்ள ஏதோவொரு தேசத்திலிருந்து புறப்பட்டு வந்து அரபுதேசத்திலுள்ள எமன் ஹல்ரமௌத் முதலிய பகுதிகளில் வந்து குடியே றிய ஒரு ஜாதியாரால் அங்கிருந்த புராதனக் குடிகள் அடி யோடு அழிக்கப்பட்டார்கள். இவர்கள் ஜக்தான் என்று

மறுபெயர் வழங்கப்பட்ட கஹ்தான் என்னும் பெயரையுடைய மனிதமூலத்திலிருந்து உற்பத்தி யானவர்களென்பது பெரும்பான்மையோரின் அபிப்பிராயம். அந்தக் கஹ்தானுடைய குமாரர்களுள் ஒருவர் யரப் என்னும் பெயரால் வழங்கப்பட்டு வந்தாரென்றும், அவருடைய பெயராலேயே இன்றைக்கும் அத்தேசமானது அரபு நாடென்று வழங்கப்பட்டு வருகிறதென்னும் சரித ஆசிரியர்களுள் மிகு தம்பேர் கூறிவருகின்றனர். யரப் என்பவரின் குமாரர் அப்துஷ்ஷம்ஸ் என்று அழைக்கப்பட்டு வந்தார்; அவருக்கோர் அருமையான மறுபெயர் ஸபா என்று வழங்கப்பட்டு வந்தது. ஆதலின் அந்தவம்சத்தில் அரசுபுரிந்து வந்த மன்னர்களுக்கு ஸாபிய மன்னர்களென்று பெயர் சொல்வது வழக்கம். அம்மன்னர்களெல்லாம் அதிகமான ஜயசீலர்களாகவும் பெரும்பெரும் பட்டணங்களை யெல்லாம் நிர்மாணிக்கக்கூடிய சக்திவாய்ந்தவர்களாகவும் பெரும்புகழ் பெற்றிருந்தனர். எமன் தேசத்திலும் அரபுநாட்டின் ஏனைப்பகுதிகளிலும் பரவியிருந்த அவர்களுடைய ராஜ்யமானது நம்முடைய நபிகள் நாயகமவர்களின் திருவவதாரத்துக்குப் பின்னும் ஒரு நூற்றாண்டு வரையில் நின்று நிலவி வந்தது.

இந்த ஸாபியர்களுக்குப் பின்னர் அந்த அரபு நாட்டில்வந்து குடியேறிய ஜாதியாருக்கு இஸ்மாயீலின் கூட்டத்தார்களென்று பெயர் கூறுவர். நபி இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய முதற்குமாரராகிய நபி இஸ்மாயீல் (அலை) அவர்களுடைய வம்சத்தாருக்கு இப்பெயர் சொல்வது வழக்கம். நபி இஸ்மாயீல் (அலை) அவர்கள் தங்களுடைய அருமைப் பிதாவினால் கொண்டுவந்து ஹிஜாஸில் குடிநிறுத்தப் பட்டார்கள். இவர்களுடைய சந்ததியார்களால்தான் அரபு தேசத்தின் பெயரானது இவ்வுலகத்தவ

ரின் கவனத்தை யெல்லாம் இழுக்கும்படியான அவ்வளவு புகழ் பெற்றதாகச் செய்யப்பட்டு விட்டது. நபி இப்ராஹீம் (அலை) அவர்களும் நபி இஸ்மாயீல் (அலை) அவர்களும் அரபு நாட்டுக்குள் வந்து குடியேறியபோது அதற்கு முன் அங்கே நிலைத்திருந்த கஅபா என்னும் ஆலயத்தை அவர்கள் பழுது பார்க்க வேண்டுமென்று ஆண்டவனுடைய கட்டளையானது பிறந்ததாக நமது குர்ஆன் ஷரீபு வேதமானது கூறுகின்றது. குர்ஆன் ஷரீபு முழுதும் ஆழ்ந்து நோக்கும் போது கஅபத்துல்லாவானது நபி இபராஹீம் (அலை) அவர்களுக்கு நெடுங்கால முன்னமே அந்த மக்கமாநகரில் அமைக்கப்பட்டிருந்த தென்னும் விஷயம் வெளியாகின்றது. நபி இப்ராஹீம் (அலை) அவர்களாலாவது அல்லது நபி இஸ்மாயீல் (அலை) அவர்களாலாவது கஅபத்துல்லாவானது முதன் முதலில் க[illegible]ப்பட்டதென்று சிலர் கூறும் கூற்றானது ஆதாரமற்றதா யிருக்கிறது. ஆதிகாலமுத லிருந்த கஅபாவை அந்த இப்ராஹீம் நபி (அலை) அவர்கள் பழுது பார்த்ததாகவே எமது திருமறை விளக்கி யிரு[illegible]கிறது. இவ்வாலயத்தைப் பண்டைக்கால முதலே அரபிகள் ஒரு புண்ணிய க்ஷேத்திரமாகக் கருதியிருந்தார்கள்; இப்பொழுதும் இந்தக் கஅபாவானது முஸ்லிம்களுக் கெல்லாம் ஒரு முக்கியமான மத்திய யாத்திரைஸ்தலமாயிருந்து வருகிறது. இதில் தான் முஸ்லிம்களின் ஒற்றுமையானது நன்கு பிரதிபலிக்கிறது. இவ்வாலயம்தான் முஸ்லிம் கலீபாவின் பாதுகாப்பிலிருக்கவேண்டுமென்று கிலாபத்வாதிகள் வாதித்து வருகின்றனர்.

அரபு நாட்டிலுள்ள மனிதர்கள் எக்காலத்திலும் இரு பெரும் பிரிவினையை உடையவர்களாகவே இருந்து வந்திருக்கிறார்கள். நகர[illegible]களில் வீடுகளை[illegible] கட்டி[illegible]கொ[illegible]டு வசிக்கும்

நகரவாசிகள் ஒருவகையாராவார். நகரங்களில் வசிப்போர் நேர்த்தியான விளை நிலங்களை வைத்துக்கொண்டு அங்கங்கே வசதியான வீடுகளைக் கட்டிக்கொண்டு ஜீவித்துவருவார்கள்; அவர்கள் வீட்டைச் சுற்றித் திராக்ஷைத் தோட்டங்களும் பூம்பொழில்களும் பேரீச்சந் தோப்புக்களும் நல்ல நிலங்களும் நிறைந்திருக்கும்; அவர்கள் ஆடுமாடு ஒட்டகங்களை மேய்த்துக்கொண்டு உழுதொழில் செய்து வருவார்கள்.

இவ்வர்க்கத்தைச் சேர்ந்த மற்றவர்கள் செங்கடல் துறைமுகப் பட்டினங்களில் வியாபாரம் செய்து வருவார்கள். அரபு நாட்டின் தெற்கிலுள்ள பாரஸீகக் குடாக்கடலோரத்திலும் கப்பல் வியாபாரிகள் வசிப்பார்கள். எமன் தேசத்திலுள்ள அரபிகளெல்லாரும் வாணிபர்களே. இங்கே வாசனைப் பண்டங்கள் மிகுதியாக விற்பனை செய்யப்படும். புலவர்கள் இப்பாகத்தை "ஸபிய்யா என்று அழைப்பார்கள். கீழ்நாட்டு வியாபாரிகளுள் இவர்கள்தாம் மிக்க ஊக்கமுடையவர்கள். இந்தியா ஆபிரிக்கா முதலிய இடங்களிலிருந்து தங்கம் வாசனைப் பண்டம் முதலிய விலையுயர்ந்த சாமான்களும், ஆபிரிக்காவிலுள்ள பார்பாரா தேசத்திலிருந்து கஸ்தூரியும் அரபு நாட்டுக்குக் கப்பல் மார்க்கமாய் வந்து சேரும்; இப்பண்டங்களெல்லாம் ஒட்டகத்தில் பொதியாக ஏற்றி உள் நாடுகளுக்கு அனுப்பப்படும். மத்திய தரைக்கடலின் வழியாக மேல் நாடுகளுக்கும் இவை ஏற்றுமதி செய்யப்படும். இந்த வாணிபர்களுக்கு வேண்டிய எண்ணிறந்த ஒட்டகங்கள் கூடாரத்தில் வசித்துக்கொண்டு ஊரூராகத் திரியும் அரபிகளிடத்தில் கிடைக்கும். தங்களுடைய நிரந்தர வாசத்தாலும் வாணிபத்தின் அமைதியாலும் இவர்கள் தங்களுடைய உண்மையான இயற்கையை மறந்து விட்டார்கள். இக்காரணத்தால்தான்

எமன் தேசத்தை அயல்நாட்டார் அடிக்கடி கைப்பற்றிக் கொண்டிருந்தார்கள். பகைவரை வெல்வது இவர்களால் முடியாமற் போயிற்று.

பாலைவனங்களில் கூடாரங்களில் வசித்துக்கொண்டு ஊர் ஊராய் அலைந்து திரியும் வனவாசிகளாகிய பத்துக ளென்னப்படுபவர் மற்றொருவகையாராவர். இந்த வன வாசிகள் தங்களுடைய குடும்பத்துடனும் ஆடு மாடு ஒட்ட கம் முதலிய கால் நடைகளோடனும் எப்பொழுதும் கூடாரங் களிலேயே வசித்துக் கொண்டு மணல் வெளிகளிலும் பசும் புற்றரைகளிலும் திரிந்து கொண்டிருப்பார்கள்.

இவர்களுள் அனேகம் உட்பிரிவுகளுண்டு. ஒவ்வொரு பிரிவுக்கும் ஒரு ஷெய்கு அல்லது அமீர் என்பவர் தலைவர். இவர் தம் கூடாரத்துக் கெதிரில் வேலாயுதத்தை நட்டு வைத்தால் அதற்கு மற்றவர்கள் கீழ்ப்படிந்து நடக்கவேண் டும். இந்தத் தலைமைப்பட்டம் ஒரேவம்சத்தில் பரம்பரை யாகத் தொடர்ந்துவரும். ஆனால் மற்றவர்கள் விருப்பம் கொண்டால் வேறொரு வம்சத்தவரைத் தலைவராக நியமித் துக்கொள்ளலாம். அமீருடைய நடத்தை மற்றவர்களுக்கு உசிதமாக இராவிடின் அவர் உடனே விலக்கப் படுவார். யுத்தம் தொடங்குவதற்கும் சமாதானம் செய்வதற்கும் அவருக்கு அதிகாரமுண்டு. ஓரிடம் விட்டு இன்னவிடம் புறப்பட வேண்டுமென்பதும் அன்னியரை ஆதரிக்க வேண் டியதும் இவராலேயே செய்யப்பட வேண்டும். ஆயினும் மற்றவர்களுடைய விருப்பத்தின் படியே அவர் நடக்க வேண்டும். இவ்வாறு அனேகம் பிரிவுகளிருந்த போதி லும் ஒவ்வொருவரும் தமக்கும் மற்றவருக்கு முள்ள ஒற் றுமை வேற்றுமைகளை நன்குணர்ந்திருந்தார். வெவ் வேறு பிரிவுகளின் அமீர்களெல்லாரும் ஒன்று சேர்ந்து

தமக்குள் ஒருவரைத் "தலைவருள் தலைவராக ஏற்படுத்திக் கொண்டு அவருக்குக் கீழ்ப்படிந்து எல்லோரும் நடப்பார்கள். ஒவ்வொரு பிரிவிலுள்ளாரும் அந்தேசத்தின் வெவ்வேறிடங்களில் அலைந்துதிரிந்தாலும் இந்தப்பெருந்தலைவர் உத்தரவு செய்தால் எல்லோரும் ஓரிடத்திற் கூட வேண்டும்.

ஆயினும் இத்தனை வர்க்கத்தாரையும் அடக்கி யாளுதற்குரிய ராஜ்யாதிகாரம் ஒருவருக்கும் இல்லாமையால் ஒருவருக்கொருவர் சதா சண்டை விளைந்துகொண்டே யிருக்கும். அவர்களுக்குள் பழிக்குப்பழிவாங்கும் வழக்கம் ஒருவேதக் கட்டளையாயிருந்து வந்தது. ஒருவன் கொல்லப்பட்டால் அவனுடைய உறவினர் அதற்கு ஈடாகப் பழி வாங்கவேண்டும். இதனால் பெருங்கலகங்களும் கொலைகளும் நேர்வதுண்டு; இக்காரணத்தால் அனேகந்தலைமுறை வரையில் சண்டை மூண்டு கொண்டே யிருக்கும். கொலையுண்டவனுக்காகப் பழிவாங்காவிடின் அவனுடைய கபாலம் வெடித்து அங்கிருந்து ஒருசிறகுள்ள பூச்சி வெளிப்பட்டு ஆகாயத்தில் கிளம்பி, "எனக்குத் தாகசாந்தி செய்யுங்கள்; தாகசாந்தி செய்யுங்கள்," என்று கத்துவதாக அவர்கள் நம்பி யிருந்தார்கள். அவனைக் கொன்றதற்காகக் கொலை செய்தவனுடைய இரத்தத்தைக் குடித்தால் மட்டுமே அவ்வுயிர் சாந்தியடைவதாக நினைத்துவந்தார்கள்.

இவர்கள் தங்களுடைய ஒட்டகங்களையும் குதிரைகளையும் கள்ளர்களினின்றும் காப்பற்ற வேண்டியது அவசியமாதலால் இவர்களுக்கு ஆயுதப்பழக்கம் நன்றாகத் தெரியும். வில் வாள் வேல் ஆகிய ஆயுதப்பிரயோகங்களில் இவரை ஒப்பாரும் மிக்காரும் அக்காலத்தில் ஒருவருமில்லை. குதிரைகளைப் பழக்குவதில் இவர்கள் மிக்க புகழ்பெற்றவர்கள் யுத்தப்பழக்கமும் இவர்களுக்குத் தெரியும். ஆனால் இ ர

கள் கொடிய துன்மார்க்கர்கள்; காதல் களவாடல் கள்ளுண்ணல் முதலிய துன்மார்க்க மனைத்தும் அவர்கள்பால் ஒருங்கே காணப்படும். பாடத்தகாத பாடல்களையெல்லாம் பகிரங்கமாகப் பாடிப் பரமானந்தம் அடைவார்கள். கொலையும் களவும் அவர்களுடைய இயற்கைத் தொழில்; வியவசாயமும் வியாபாரமும் இழிதொழிலென்று கருதுவார்கள். இத்தகைய இழிதொழில் செய்வோரைக் கொள்ளை யடிப்பதாலும் கொலை செய்வதாலும் ஒன்றும் தீங்கில்லை யென்றும் சமாதானம் செய்து கொள்ளுவார்கள்.

இந்த அரபிகளுடைய தோற்றமோ மெலிந்து காணப்படும். ஆனால் தேகதிடம் வாய்ந்து சுறுசுறுப் புள்ளவர்களாயிருப்பார்கள்; அளவற்ற துன்பத்தையும் அயர்ச்சியையும் சகிக்கக்கூடியவர்கள்; அவர்களுடைய நிறம் பழுப்புக்கலந்த வெண்மையாயிருக்கும். ஆகாரம் மிதமாகச் செய்வார்கள்; பேரீச்சம்பழங்களையே பெரும் பாலும் புசித்து ஜீவிப்பார்கள்; அவர்களுடைய தேகத்தைப்போல் மனமும் உறுதி வாய்ந்ததா யிருக்கும். விஷயங்களை எளிதில் அறிந்து கொள்ளும் சக்தியும் கூரிய நுண்ணறிவும் சிறந்த கற்பனைசக்தியும் பெற்றிருப்பார்கள். தங்களுடைய குலத்தைப் பற்றி மிக்கபெருமை பாராட்டிக் கொள்ளுவார்கள். சிறந்த புலவர்கள் எழுதிய காவியங்களைக்கேட்டால் மனமுருகி மெய்ப் பாடுறுவார்கள். வேறுபாஷைகளைக் காட்டிலும் அரபுபாஷைக் குள்ள பலவகை மேன்மையால் அவர்களெல்லோரும் இனிமையாகப் பேசுந்திறம் பெற்றிருந்தார்கள். பெரு காப்பியங்களைப் படிப்பதைக் காட்டிலும் சிறுநூல்களிலேயே அவர்களுக்கு விருப்பம் அதிகமாயிருக்கும். அவர்களுடைய பேச்சில் உபாக்கியானங்களும் உபகதைகளும் மிகுந்திருக்கும்.

அவர்கள் கொடுமைவாய்ந்த போர்வீரர்களா யிருந்த போதிலும் பெருந்தன்மையும் விருந்தினரை உபசரிக்கும் குணமும் அவர்மாட்டு மிகுந்திருந்தன; தர்மம் செய்வதில் மகிழ்ச்சி யுடை யவர்கள்; வழிப்போக்கர் யாரும் அவர்கள் வீட்டுக்குள் தடை யின்றி நுழையலாம். ஜன்மவிரோதிக ளாயினும் ஒருமுறை சேர்ந்து விருந்துண்டு விடுவார்களா யின் பிறகு எப்பொழுதும் அவர்களுக்குள் மனவருத்த முண்டாகாது.

யுத்தத்தில் பிடிபட்ட பெண்கள் வெற்றியடைந்தவ ரின்கீழ் அடிமைத் தொழில் புரியவேண்டும் ; எஜமான்கள் விரும்பினால் இப்பெண்கள் பாடல்பாடி நாட்டியம் செய்ய வேண்டும் ; சொந்தக்காரர் தங்கள் பெண்களைச் சிறை மீட்டுக்கொள்ள விரும்பினால் வெற்றி பெற்றவரால் குறிக்க ப்பட்ட ஈடுகாட்டிப்பணத்தைக் கொடுத்து மீட்டுக்கொண்டு போகவேண்டும்; இந்தப்பணம் வெற்றி பெற்றவரைச் சேரும்.

அத்தேசத்தின் ராஜ்ய விஷயத்தைக் கவனிக்குங்கால் அரபு நாட்டின் வட பாகமும் மத்திய பாகமும் எக்காலத் திலும் அன்னிய ஆட்சியாரின் கீழ் அமைந்திருந்ததாகத் தெரியவில்லை; ஆனால் எமன் தேசத்தில் மட்டும் அபிஸனி யர்கள் (ஹபஷிகள்) சிறிதுகாலம் ராஜ்ய பரிபாலனம் புரிந்து வந்தார்கள். அவர்களும் கொஞ்ச காலத்துக்கெல்லாம் ஓர் அரபு அரசரால் பாரஸீக மன்னர்களின் துணையைக் கொ ண்டு துரத்தப்பட்டார்கள். அந்த நாளிலிருந்து மீண்டும் ஒரு நூற்றாண்டு வரையில் எமன் தேசமானது பாரஸீக தேசத்தின் ராஜப் பிரதிநிதியின் கீழ் அமர்ந்திருந்தது.

அக்காலத்தில் அரபு தேசத்தில் மிகுதமான யூதர்க ளும் சிற்சில கிறிஸ்தவர்களும் வசித்து வந்தார்கள். அவர்

ள் தங்கள் தங்களுடைய மதத்தைதயே பின்பற்றிவந் தார் ள். ஆனல் அரபிகளுள் பெரும்பான்மையோர் விக் கிரஹங் களையும் வானத்திலுள்ள நட்சத்திரங் களையும் வண ங்குகிறவர்களா யிருந்தார் ள். ஒவ்வொரு நகரத்துக்கும் வெவ்வேறான ஆண் சாமியும் பெண் சாமியும் இருந்து வந்தன. ஒவ்வொன்றுக்கும் தனித்தனியான ஆராதனையும் நியமிக்கப் பட்டிருந்தது. இவ்வாறே ஒவ்வொரு கோத் திரத்தாருக்கும் தனித்தனியான தெய்வமும் தனித்தனி யான கோயிலும் பூஜையும் காணப்பட்டன. அந்த அரபு தேசத்து மனிதர்களுடைய எல்லாக் கோத்திரத்தாருக்கும் பொதுவான மத்தியபாகமென்று கருதப்பட்டு வந்த மக்கமா நகரிலுள்ள கஅபாவில் மட்டும் மூன்னூற்றறுபது விக்கிர ஹங்கள் ஸ்தாபிக்கப்பட் டிருந்தன. தினமொன்றுக்கு ஒரு விக்கிரஹம் வீதம் வருஷமொன்றுக்கு 360 தினத்துக்கும் 360 விக்கிரஹங்களைப் பூஜித்து வந்தார்கள். அந்தத் தெய் வங்களுக்கு ஆண் நரபலியும் அடிக்கடி யிடுவார்கள். இன் னும் அவர்களுடைய குணவிசேஷமானது மகா அருவருப் புள்ளதாயிருந்தது. ஒவ்வொரு மனிதனும் நூற்றுக் கணக் கா மனைவிகளை விவாஹம் செய்து கொள்வான். பலதார மம் அவர்களுக்குள் இயற்கையான முக்கமா இருந்து வந்தது; ஒருதாரமணம் செய்வதை ஓர் இழி தொழிலாக எண்ணியிருந்தார்கள். இஃதல்லாமல் வியபசாரமும் மதுபா னப் பழக்கமும் கரைகடந்து வழங்கின. ஓர் அரபியினுடைய மகன் தன் தகப்பனுடைய மறு தாரங்களை யெல்லாம் த னுடைய மனைவிகளாகவே பாவித்து அவர்களைப் பெ டாளத் துணிந்து விடுவான். இன்னும் கொலையும் களவும் கொள்ளையும் அவர்களுக்கு நித்தியப் பழக்கமாயிருந்து வந் தன. அவர்களுக்குப் பெண் குழந்தை பிறக்குமாயின் சிலர்

அதை உயிருடன் மண்ணில் புதைத்து விடுவார்கள். அவர்களுடைய கொடூரமான குணங்களுள் அதிக பயங்கரமானது அவர்கள் தங்கள் பெண் குழந்தைகளை உயிரோடு சவக்குழியில் புதைப்பதுதான். அக் குழந்தை ஜீவித்திருந்தால் பிறருடைய விபசாரத்துக்கு ஆளாய் விடக்கூடுமென்னும் அச்சத்தினால் இப்படிப் புதைத்து வந்தார்கள். அவர்கள் பொதுவாகப் பெண்களை மிக்க இழிவுடன் நடத்தி வந்தார்கள். பெண்களுள் அனேகர் வித்வான்களாகவும் யுத்தவீரர்களாகவும் இருந்துவந்த போதிலும் அவர்கள் மகா இழிவாகக் கருதப்பட்டு வந்தார்கள். அவர்களுடைய விவாகம் மிக எளிதாக நடத்தப்பட்டு வந்தது; புருஷர்களுடைய கோபத்துக்குத் தக்கவாறு அவ்விவாக பந்தமும் அதி எளிதில் முறிக்கப்பட்டு வந்தது. இன்னும் அவர்களுடைய அருவருப்புள்ள பாமரத்தன்மையை ஏட்டில் எழுதுவதென்றால் ஈண்டு இடம் போதாதென்று அஞ்சி இம்மட்டோடு நிறுத்திக்கொண்டோம்.

## அத்தியாயம் 2.

### நபி அவதாரமும் இஸ்லாமிய போதமும்



"அல்லாஹுத் தஆலாவின் மீதும் இறுதித் தீர்ப்பு நாளின் மீதும் நம்பிக்கைவைத்து அல்லாஹ்வை அதிகம் ஞாபகத்தில் வைப்பவனுக்கு வேண்டிய முன் மாதிரியாகிய நமூனாவானது அல்லாஹ்வின் திருத்தூதரிடத்திலேயே யிருப்பதாக நீங்கள் நிச்சயமாகக் கண்டுகொள்வீர்கள் (குர்ஆன், 33:21).

அரபு நாட்டின் ஆதிகால சரித்திர 'களை யெல்லாம் நாம் குர்ஆன் ஷரீபிலிருந்தே மிகுதம் தெரிந்து கொள்ள லாம்; அதில் ஆதிகால முதல் நடை பெற்று வந்த சரித் திரக் குறிப்பெல்லாம் காட்டப்பட்டிருக்கின்றன. மேலும் அரபிகளுடைய ஞாபகசக்தியானது மிகச் சிறந்ததாயிருந் ததனுல் அவர்கள் த'களுடைய புராதன சரித்திர 'களை யெல்லாம் கர்ண பரம்பரையான கதைகளிலேயே அமை த்து வைத்திருந்தார்கள். ஆனுல் நம் நபிகள் நாயகம் அ ர் ளுடைய திருவவதாரத்திற்குப் பின் இருநூறு வருஷ' கள் சென்ற பிறகு அந்நாட்டுச் சரித ஆசிரியர்கள் தங்களு டைய பூர்வீக சரித்திரங்களை யெல்லாம் அதி ஜாக்ரதை யுடன் சேகரம் செய்து கிரந்த ரூபமாக வெளியிட்டிரு' கின்றனர். எமன் தேசத்தின் சில பகுதிகளிலிருந்து கண் டெடுக்கப்பட்ட சிலாஸாஸனங்களில் எழுதப்பட்டிருக்கும் விஷயத்தை ஊன்றி வாசித்துப் பார்க்குங்கால் அவற்றி லுள்ள சரித்திரங்களும் குர்ஆன் ஷரீபிலுள்ள சரித்திர' ளையும் கர்ண பரம்பரையான தைகளையும் முழுதும் ஒத் திருக்கின்றன.

அரபு நாட்டி லிருந்த எல்லா மாகாணங்களின் மனிதர் ளைப் பற்றியும் நாம் அதி ம் தெரிந்து ெ ாள்ளவேண்டு தில்லை. மத்தியகால' களில் இவ் வுலகத்தில் பெரும் பு ழ் பெற்ற ஹிஜாஸின் அரபிகளையும் எமன் தேசத்து அரபி ளையும் பற்றி மட்டுமே நாம் ஈ 'டுத் தெரிந்து ெ ாள்ளு வோம். ஹிஜாஸ் தேசத்து அரபி ளுள் முக்கியமான ர்' கத்தாருக்கு' குரைஷ் குலத்தார் எ 'று பெயர்சொல் ர். இக்குலத்தாரின் மூல பிதா பிஹ்ர்* என்று சரித ஆசிரியர்

*பிஹ்ரின் குமாரர் காலிப். காலிபின் குமாரர் லுவ்வை. லுவ் வையின் குமாரர் கஅப். கஅபின் குமாரர் முர்ரா. முர்ராவின் குமா

ள் கண்டுபிடித் திருக்கிறார்கள். பிஹ்றுடைய தந்தை இன்னாரென்று யாம் கண்டுத்தெரிந்துகொள்ள வேண்டுவதில்லை இந்த பிஹ்ர் என்பவருக்குக் குறைஷ் என்று மற்றொரு சிறப்புப் பெயர் வழங்கப்பட்டு வந்தது. "குறைஷ்" என்னும் பதத்தின் தாத்பரியம் புராதன அரபு பாஷையில் ர்த்தகர் என்று பொருள் பட்டுவந்தது. இந்தக் †குறைஷ் என்னும் வியாபாரி வாழ்ந்துவந்த காலம் கிரிஸ்துவுக்குப் பிறகு மூன்றாவது நூற்றாண்டா யிருந்தது. இவருடைய முன்னோர்களின் வம்ச பரம்பரை முழுதும் ஒழுங்கா த் தெரியாமற் போயினும் ஆதிகாலத்திலிருந்த நபி இஸ்மாயீல் (அலை) அவர்களுடைய வம்சத்தில் வந்த அத்னான் என்பவருடைய குமாரராகிய மஆத் என்பவரின் கோத்திரத்தில் பிறந்தவ ரென்பது மட்டும் அத்தேச சரித்திரத்தால் நன்கு விளங்குகின்றது. ஹிஜாஸிலுள்ள குறைஷ் குலத்தார்கள் மட்டும் தங்களுடைய குலப் பெருமையைப் பற்றியும் கோத்திர உயர்வைப் பற்றியும் மிகுதம் பெருமை பாராட்டி வந்தார்கள். மற்றெல்லாக் கோத்திரத்தாரைக் காட்டிலும் குறைஷ் குலத்தார் உண்மையில் மிகச் சிறந்தவர்களே, பெருமையிலும் பரிசுத்தத்திலும் இவர்களை மிக்காரும் ஒப்பாரும் யாருமில்லை.

---

ரர் கிலாப். கிலாபின் குமாரர் குஸ்ஸை. குஸ்ஸையின் குமாரர் அப்துத்தார். அப்துத்தாரின் சகோதரர் அப்துமனாபு. அப்து மனாபின் குமாரர் அப்துஷ்ஷம்ஸ். அப்துஷ்ஷம்ஸின் சகோதரர் ஹாஷிம். ஹாஷிமின் குமாரர் அப்துல் முத்தலிப். அப்துல் முத்தலிபின் குமாரர் அப்துல்லா. அப்துல்லாவின் குமாரர்தாம் நமது நபீகரீம் முஹம்மது முஸ்தபா ரஸூல் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களாவார்கள்.

†கரஷ் என்னும் தாதுவுக்கு வியாபாரம் செய்தல் என்பது தாத்பரியம்.

கி-பி. நான்காவது நூற்றுண்டின் இறுதியில் பிஹ்ரின் வம்சத்தில் வந்த குஸ்ஸை* என்பவர் மக்கத்தின் தலைவரா யிருந்து சிறுகச்சிறுக ஹிஜாஸ் முழுமைக்கும் அரசராக ஆய்விட்டார். அவருடைய காலத்துக்குமுன் வரையில் மக்காவானது ஒரு சிறு பட்டிக்காடா யிருந்தது. அங்கே சில குடிசைகளும் கூடாரங்களுமே கா ப்பட்டன. இத் தக் குஸ்ஸை என்பவர் கஅபாவைப் பழுது பார்த்து அத னருகில் தனக்காக ஒரு மாளிகையையும் அமைத்துக் கொ ண்டார். அம்மாளிகையிலுள்ள ஒரு முக்கிய ஹாலானது ஊரார்கள் கூடிப் பேசுவதற்குரிய 'தாருன் நத்வா எ ' னும் ஆலோசனை மண்டபமாக உபயோகிக்கப்பட்டு வந் தது. அதில் பொது ஜனங்களுடைய பொதுக் காரிய மெல்லாம் ஆலோசிக்கப்பட்டுவந்தன. இவர் குரைஷ் குல த்து மனிதர்களை யெல்லாம் கஅபாவைச்சுற்றிக் ல்வீடு கட்டிக்கொண்டு வசிக்கும்படி செய்தார். மனிதர்கள் சமூ வாழ்க்கையில் ஒற்றுமையுடன் வாழ்வதற்கு வே டிய சட்டதிட்டங்களை யெல்லாம் இவர் ஒழு ாக ஏற்படுத்தி ஞர். அரபுநாட்டின் பல் வேறு பாக களிலு மிருந்து கஅபத்துல்லாவை நோ கி யாத்திரையாக ர கூடிய மனிதர்களுக்கு அன்னபானுதி ளை அளிக்கும் பொருட்டு அவற்றிற்கு வேண்டிய ரிப்பணத்தை (ரிபாதா) சூல் செய்தற்கு அவசியமான விதிமுறை ளை யெல்லாம் ஒழு காக நிர்மா ம் செய்து வைத்தார்.

குஸைை என்பவர் சுமார் ஈஸவி 480 ம் ஆ டில் தே வியோகமானுர் அத பின் அ ருடைய தானத் தை அவாது குமாரரான அப்துத்தார் என்ப ர் கி லாயினுர். அவர் ாலகதியால் சில ாலம் சென்று தே

---

*குஸ்ஸை என்பவர் ஈஸவி 398 ம் ஆண்டில் பிறந்தார்.

வியோகமான பின்னர் மக்காவின் ஆட்சியை ஏற்று கொள்ளும் விஷயத்தில் அவருடைய வம்சத்தவருக்கும், அவருடைய சகோதரரான அப்துமனுபின் புத்திரர்களுக்குமிடையில் சச்சரவு ஏற்பட்டது. இது சம்மந்தமான சமாதான மொன்று செய்யப்பட்ட பொழுது மக்காவின் ராஜ்யாதிகாரமானது இருபிரிவாகப் பிளக்கப்பட்டது: மக்காவுக்குத் தண்ணீர் வரவழைத்துக் கொடுக்கவேண்டிய பொறுப்பும் (விக்காயா), வரிப்பணம் வசூல் செய்துகொள்ள வேண்டிய அதிகாரமும் (ரிபாதா) அப்துமனுபின் குமாரரான அப்துஷ்ஷம்ஸ் என்பவரிடம் ஒப்படைக்கப்பட்டன; ஆனால் கஅபாவைக் காப்பாற்ற வேண்டிய கடமையும் (ஹிஜாபா), ஆலோசனைச்சபையின் மண்டபத்தை மேற்பார்க்கவேண்டியதும் (நத்வா), ராஜாங்கச் சின்னமாகிய கொடியைத்தாங்குவதும் (அல்லிவா) அப்துத்தாரின் மக்களிடம் ஒப்படைக்கப்பட்டன.

ஏழையான அப்துஷ்ஷம்ஸ் என்பவர் தம்முடைய அதிகார முழுதையும் தமது சகோதரரும் மக்காவிலுள்ள ஒருபெரிய வர்த்தகருமான ஹாஷிம் என்பவரிடம் கொடுத்துவிட்டார். இவர் மக்காவில் மகா செல்வாக்குள்ளவர்; மேலும் தானதர்மம் செய்யும் விஷயத்தில் மகா தயாள குணமுள்ளவர். இவர்தாம் மாரிக்காலத்தில் எமன் தேசத்துக்கு ஒரு காரவானும் கோடைக்காலத்தில் ஷாம் தேசத்துக்கு ஒரு கார்வானும் சென்றுவரும்படி ஏற்பாடுசெய்து மக்கத்து வியாபாரத்தை அதிகமாய் விருத்தி செய்தார். இப்படிப்பட்ட ஹாஷிம் என்பவர் ஈஸவி 510 ம் ஆண்டில் ஷாம் தேசத்திலுள்ள கஸ்ஸா என்னும் நகரில் மரணமாய் விட்டார்; இவருக்குப் பின்னே இவரது சகோதரரான தாராள குணமுள்ள (அல்பைஜ்) முத்தலிப் என்பவர் தம்

முடைய தமையனாரின் அதிகாரத்தை ஏற்றுக்கொண்டார். இவர் சிலகாலம் அதிகாரம் செலுத்திவிட்டு ஈஸவி 520 ம் ஆண்டில் காலமாய்விட்டார் இந்த முத்தலிப் என்பவர் ம்முடைய ஆளுகையின் போது, தமது தமையனான ஹாஷிம் என்பவருக்கு யதுரிப் (மதீனாவின் பழயபெயர்) என்னும் பட்டணத்தில் ஸல்மா என்னும் மாது சிரோமணிக்குப் பிறந்திருந்த ஷைபா என்னும் குழந்தையை ம'கத்துக்குக் கொண்டுவந்தார். ஆனால் ஷைபாவின் தந்தை ஹாஷிம் என்பதை அறிந்து கொள்ளாத மக்கத்து மனிதர்கள் அ'குழந்தையை முத்தலிபின் அடிமையென' ருதி அவருக்கு "அப்துல் முத்தலிப் என்று நாமஞ்சூட்டிவிட்டார்கள். முத்தலிப் எமன் தே, சத்திலுள்ள க'வானில் இறந்துபோனபின்னர் அப்துல்முத்தலிப் என்று பெயர் வழங்கப்பட்டுவந்த ஷைபா என்பர் மக்காவின் அதிகாரத்தை வகிக்க முன்வந்தார்.

இதற்கிடையில் அப்துத்தாரின் பேரர்கள் மக்காவில் மிக் செல்வவான்களாகச் செருக்குமிக்கு வந்தார்கள். ஆனால் அநேநகரில் ஹாஷிமுடைய வம்சத்தார் தங்களைக் காட்டிலும் மிகுதமான செல்வாக்குடையவரா யிருப்பதை ' 'டு அப்துத்தாரின் ர்க்கத்தவர் மிகுதம் பொறாமை கொண்டு அன்னாரின் அதிகாரத்தைப் பற்றிக்கொள்ளப் பிரயத்தனப்பட்டனர். அப்துஷ்ஷம்ஸுடைய குமாரரான போராசைபிடித்த மையா என்பவர் அந்தக்கக்ஷியின் தலைமை ஸ்தானத்தை ஏற்றுவந்தார். ஆனால் அப்துல் முத்தலிபிடம் பொதுஜன' ளு'கிருந்த பிரியத்தினாலும் மரியாதையினாலும் அவரே அந் ந ரின்தலைமையைச் செவ்வனே கித்துவந்தார். அ ருடைய கு விசேஷமும் பெருந்தன்மையுமே அவருக்கு இப்படிப்பட்ட நன் மதிப்பை உ'

ரகிவிட்டன. ஆதலின் கஃபாவின் மேற்பார்வை யென்னப்பட்ட ஹிஜாபா என்னும் சர்வாதிகாரமும் தண்ணீர் வரவழைத்துக் கொடுக்கவேண்டிய ஸிக்காயா என்னும் அதிகாரமும் அப்துல் முத்தலிபின் கையிலேயே வந்து சேர்ந்துவிட்டன. இதனாலும் உமையாவின் அசூயையானது அதிகரித்து வந்தது. ஆயினும் ஜனங்களுடைய நன்மதிப்பால் அப்துல் முத்தலிப் சுமார் ஐம்பத் தொன்பது வருஷங்கள் வரையில் அந்த மக்கமாநகரில் ஆட்சிபுரிந்து வந்தார்.

ஆண்டவனருளால் அப்துல் முத்தலிப் அவர்களுக்குப் பன்னிரண்டு குமாரர்களும் ஆறுகுமாரத்திகளும் ஜனனமானார்கள்; அவர்களுள் முக்கியமானவர்கள்: அபூலஹப் என்று மறுபெயர் வழங்கப்பெற்ற அப்துல் உஸ்ஸா என்பவர்; (இவர்தாம் நம்முடைய நபிகள் நாயகமவர்களை மிகுதம் துன்பப்படுத்தினர்); அப்துல் மனாபு என்று சொல்லப்படுகின்ற அபூத்தாலிப்; (இவர் ஈஸவி 540 முதல் 620 வரையில் ஜீவித்திருந்தார்); அப்துல்லா; (இவர் ஈஸவி 545-ல் பிறந்து 570-ல் மரணமானார்); அப்பாஸ்; (இவர் 566-ல் பிறந்து 652-ல் மரணமானார்). அப்துல்லாவின் தாயார் பெயர் பாத்திமா என்பதாகும்; இம்மாதாசியின் தந்தையார் அம்ர் என்று அழைக்கப்படுவார்.

அப்துல்லா என்பவர் யதுரிப் நகரத்திலுள்ள ஸோஹ்ரியென்னும் வர்க்கத்தின் தலைவராகிய வஹ்ப் என்பவருடைய குமாரத்தியாகிய ஆமினா என்னும் மாது சிரோமணியை மணந்து கொண்டார். அதற்கு மறுவருஷத்தில் எமன்தேசத்து மாகாணாதிபதியான அல்அஷ்ரம என்று மறுபெயர் வழங்கப்பெற்ற அப்ரஹா என்னும் கிறிஸ்தவன் ஒருபெரிய ஹபஷிச் சேனையுடன் அபதுல்லாவின்மீது படையெடுத்து வந்தான். இவ்வைபவம் அப்துல் முத்தலி

பின் ஆட்சியில் ஈஸவி 570 ம் ஆ ' டில் நிகழ்வுற்றது; அவ் ே ளாயில் அப்ரஹா என்னும் அந்த எமன் தேசத்து மாகா ஞாதிபதி ஒருபெரிய யானையின்மீது சவாரிசெய்து வந் தான்; இந்த யானையென்னும் மிருகம் அந்த அரபிகளுக்கு ஒரு நூதனமான ராக்ஷஸப்பிராணியா யிருந்ததனுல் ஹப ஷிகளின் படையெடுப்பு ருஷத்துக்கு ஐயாமுல்பீல்' (அஃதாவது, ஆனையின் ஆ ' டு) என்று அந்த அரபிகள் பெயர்வைத்து விட்ட ார்கள். அந்தயானை யுடைய படை யுடையவர்கள் அப்பொழுது தெய்வ சோதனையா த் தோற் டிக்கப்பட்டு நாசமடைந்து போனார்கள்.

அப்துல்லா இந்த "ஐயா முல் பீலு க்கு முன்வருடத் தில் ஆமினுவை விவாகம் செய்துகொ ' டு பிறகு சிறிது ாலத்து 'குள் தம்முடைய இருபத்தைந்தாவது பிராயத் தில் தேகவியோகமாய்ப் போனார். அவருடைய மர த் துக்குச் சிலதினம் பின்னர் அந்த ஐயாமுல் பீல் ஆ ' டி லேயே ரபீயுல் அவ்வல்மாதம் பிறை 12 தி ' கட்கிழமை யன்று (ஈஸவி 570, ஆகஸ்டுமாதம் 29ந் தேதியில்) ம ' மாநகரில் ஓர் ஆ ' குழந்தை திரு தாரம் புரிந்தது. அப் துல் முத்தலிபின் கடை 'குட்டி மகனுகிய அப்துல்லாவு ை ய மனைவியாயிருந்த ஆமினுவின் திருவயிற்றினின்றும் தோன்றிய அந்த ஆண் குழந்தைக்கு அதன் பாட்டனுர் முஹம்மத் (பு ழப்பட்ட ர்) என்று நாமகரணம் சூட்டி னுர். அ 'குழந்தைக்கு ஆறு யதாம்பொழுது அன்னை ஆமினுவும் ால தியால் தேக வியோ மாய் விட்டார். அதன் பி ' அன்னையும் பிதாவுமற்ற அந்த வாலிபரைப் பாது ா ' ே ' டிய பொறுப்பானது அவருடைய பாட் டனுர் அப்துல் முத்தலிபி ' மீதே சார்ந்து விட்டது. ஈஸவி 579 ம் ஆ ' டி ' அப்துல் முத்தலிப் இறந்தபோது

அ ருடைய அதிகாரம் முழுதும் அவரது அருமைக் குமாரராகிய அபூத்தாலிப் அவர்களிடம் வந்து சேர்ந்ததே போல் இளம் பிள்ளையாகிய அந்த அகதியைக் காப்பாற்ற வே 'டிய பொறுப்பும் அவர் மீதே சார்ந்து விட்டது இந்த அபூத்தாலிப் அவர்களுடைய குடும்பத்திலேயே நம் முடைய முஹம்மதானவர் (ஸல்) தம்முடை ய பால்ய தசையைக் கழித்து வந்தார். இவ்வாலிபர் இனிய குணமும் எளிய நடையும் உ டையவராயிருந்து எப்பொழுதும் முக மலர்ச்சியையும் அக மலர்ச்சியையும் அதிகம் படைத்தி ருந்ததனால் அவருடைய குடும்பத்தார்களும் அக்கம் பக் கத்திலுள்ளவர்களும் அவரை மிகுதம் நேசித்துவந்தார்கள். அவர் மகா சாந்தகுண சீலரும் தயாள மிக்க பாலருமாயி ருந்ததனால் ஏழைகள் படும் துயரத்தைக்கண்டு பெரிதும் மனமுருகுவார். அவர் அதி பால்யத்திலேயே மகா மேதா வியாகவும் எல்லோரிடத்திலும் இனிய மொழி பேசும் பூர்வ பாஷியாகவும் இருந்துவந்தார். ஆயினும் அவரு டைய வாலிபப் பிராயமானது முழுதும் இலேசான வாழ்க் கையா வே யிருந்ததில்லை. அபூத்தாலிபானவர் தம்முடைய முன்னோர் ளைப் போலில்லாமல் வியாபாரத்தினால் அதி மான நஷ்டத்தை யடைந்து சிறிது ஏழ்மைத் தனத்தைப் பெற்று விட்டபடியால் அவருடைய வீட்டிலிருந்த சிறு ர்களும் சிறுமிகளும் தங்களுடைய ஒட்டகம் ஆடுமுதலிய கால்நடைகளை மேய்க்கும்படியான தொழிலில் அமரும் படியான அ சியம் நேரிட்டு விட்டது.

மி ச் சிறு பிராயத்திலிருந்தே முஹம்மதான ர் (ஸல்) தனிமையான தியானத்தில் மூழ்கி விடுவது வழக் ம். ஒட்ட 'களை மேய்த்துக் கொ 'டிருக்கும்போது ற்றைச் சிறுர் ளுட ' கூடி விளையாடாமல் ஏ ராந்தமான

கற்பாறைகளின்மீது குந்திக்கொ டு இயற்கையின் இரக சியத்தைப் பார்த்துப் பார்த்து ஆனந்த தியானத்தில் அடிக்கடி ஆழ்ந்து விடுவார். இவர் தம்முடைய பெரிய தந்தையாகிய அபூத்தாலிப் அவர்களுடன் இரண்டு முறை வர்த்தகத்தினிமித்தம் ஷாம் என்னும் ஸிரியா நாட்டுக்குச் சென்றிருந்தார். அ கெல்லாம் மனிதர் ள்படும் துக் த் தையும் துயரத்தையும் கண்டு மிகவும் மனம் வருந்துவார்; அவர்களுடைய கஷ்ட ஜீவனத்தையும் நிஷ்டூரமான வாழ்க் கையையும் பார்த்து மிகவும் பரிதபித்து உள்ளங்கசிந்து உருகுவார்; இவர்களை யெல்லாம் மேன்மைக்குக் கொ ரு வருதற்கு ஏதேனுமொரு வழியுண்டோ வென்று ஏங்கி நிற்பார். ஆயினும் இவருக்கு வியாபாரத்திலிருந்த சாமர்த் தியத்தையும் சாதுர்யத்தையும் கண்டு மக்கமா நகரிலிருந்த கதீஜாவென்னும்(ரலி) வர்த்தகமாது ஒருவர் இவரைத் தம்முடைய வியாபாரத்தில் சேர்த்துக்கொண்டார். கதீஜா வென்பவர் அந்நகரிலிருந்த ஒரு பெரும் ஸ்ரீமாட்டி; மேற் குலத்திற் பிறந்த பெருந்தன்மை வாய்ந்த ஒரு பெரு மாட்டி. அவருடைய வர்த்த த்தில் அபூத்தாலிபின் அரிய செல்வர் மிகுதமான இலாபத்தைக் ஈட்டியபடியால் அவர் மீது கதீஜாவு கு மனப் பிரியம் அதிகமா யேற் பட்டது. அதன் பின் அவருடைய குணதிசயத்தைக் கண்டு அவருடைய மேன்மையில் அம்மாதரசி அதிகம் ஈடுபட்டு விட்டபடியால் அவர்களுக் கிடையில் அரியவிவா கம் ஒன்று நிகழும்படியான அவ்வளவு மனமுவப்பு நேரி ட்டு வி டது. அப்பொழுது ம்முடைய நாயக மவர்களு க்கு வயது 25. அம்மங்களகரமான மணமகருக்கும் மண மகளுக்கும் இடையில் பல குழந்தை ள் பிறந்தன. அவர் களுடைய ஆண் குழந்தை ளெல்லாம் அரியபால்யத்தி

லேயே ஆ ்டவன் வசம் சேர்ந்து விட்டார்கள்; ஆனுல் அவர் ளுடைய பெண் குமாரிகள் மட்டும் தம்முடைய தந்தையாரின் பிற்காலத்திய பெருமைகளை யெல்லாம் பார்க்கும் வரையில் பிழைத்திருந்தார்கள். கடைப்பெ ணுகிய பாத்திமா அவர்களை ஆபூத்தாலிபின் அருமை குமாரராகிய அலீ (ரலி) அவர்களுக்கு விவாகமுடித்து வைத்தார்கள். இப் பெண்மணிக்கு அஸ்ஸுஹரா (அழகியமாது) என்ெருரு பெயரு முண்டு.

நம்முடைய நாயகமவர்கள் தங்களுடைய விவாஹத்துக்குப்பின் பதினைந்து வருடங்கள் மட்டும் பொதுக் காரியங்களில் அதிகமாகத் தலையிடாமல் ஏகாந்தமாகவே வசித்துவந்தார்கள்; ஆனுல் அக்காலத்தில் இர ்டு முறையல்லாமல் மற்றைவேளைகளில் ப ர ்கக் காரியங்களில் தலையிடவேயில்லை. வியாபாரத்துக்காகவும் வெளியில் செல்வதை விட்டுவிட்டார்கள். விதவைகளையும் அகதிகளையும் திக்கற்றவர்களையும் காப்பாற்றும் பொருட்டு மக்கமாநகரில் அதற்குப் பல வருஷங்களுக்கு முன்னரே ஒரு சங்கம் ஸ்தாபி ்பபட்டிருந்தது; அது நம்நாயகத்தின் காலத்தில் சிறிது சிர்கேடுற்றிருந்தது; அதை நாயகமவர்களே சரியான நிலைமையில் கொண்டுவந்து நிறுத்திஞர்கள். மற்ெருருசமயம் மக்காவில் ஒருவிதமான பெருத்த கலகம் ஏற்படும்போல் ாணப்ப ் டது: அரபிகளின் கோத்திரத்தாருக்குள் கஅபாவின் சுவரில் பதி ்கப்படவே ்டிய "ஹஜருல் அஸ்வத் என்னும் கல்லின் விஷயமா அப்பெரு ்கலகம் விளையுமென்று அதிக திகிலுடன் எதிர்பார ் ப்பட்டது. அவ்வேளையில் நமது நாயகமவர்கள் தங்களுடைய சமயோசிதமான புத்திசாதுர்யத்தால் அப்படிப்பட்ட கலகமொன்றும் வாராமல் அதிசாமர்த்தியமாகத் தடுத்துவிட்டார் ள். இந்த

இரண்டு ாரியங் ளிலல்லாமல் மற்றெப்பொழுதும் அவர் கள் பகிரங் மா விஷயங்களில் தலையிட்டதேயில்லை. இவ் வாறு அவர் ள் ஏ ாந்தமான ாழ்க்கையிலிருந்து ந்த போதிலும் அ ர்களுடைய சாந்தகு ஒழுக்கத்திலும் ச ்மார்க்க விசேஷத்திலும் நெறியான நியாயத்தி லும் நீதமுள்ள நடத்தையாலும் அவர்களுக்கு அந்நகர ாசிகள் அல்அமீ ் (நம்பிக்கை க்குரியவர்) என்னும் சிறப் புப்பெயரொன்றையும் அளித்தார் ள் நம் நாயகம ார் ளி டத்திலிருந்த ஒரு சிறந்தகுணம் யாதெனின், அவர் ள் சிறுகுழந்தை ளை அதி மா அபிமானித்து வந்தார் ள்; ஆதலின் அவர்கள் வீட்டைவிட்டு வெளியில் வரும்போது சிறுகுழந்தைகள் கூட்டமாக வந்து அவர்களைச் சூழ்ந்து கொள்வது வழக்கம்; அப்பொழுது நாயகமவர்கள் அக்கு ழந்தைகளிடத்தில் முகமலர்ச்சியுடன் பிரியவசனம் சொல் லாமல் அப்பால் செல்வதில்லை; குழந்தைகளைக் கண்டு அன் புடன் புன்சிரிப்புச் செய்யாமல் ஒருபோதும் அவர் ள் சும் மாபோவதில்லை. ஒவ்வோர் ஆண்டிலும் ரமலான் மாதத் தில் அவர்கள் மக் ாவுக் கருகிலுள்ள ஹிராவென்னும் மலை யிலுள்ள குகை யில் தனி ் திருந்தும் விழித்திருந்தும் தியா ம் செய் துவழ ் ம். அப்பொழுதெல்லாம் மனிதகோடி ளை முன்னுக்கு ் ெ ா ் டு வருதற்குரிய வழி யாதென அல்லும் ப லும் ஆ ்டவனிடம் குறையிரந்து கொண்டே யிருப்பார் ள்; அதனுடன் ஆத்மஞானத்துக்குரிய துறை யும் யாதெ ் று உசாவிய ் மாகவே ால ் கழித்து ந் ார் ள். அப்பொழுது ஒரு ரமலான் ாதத்தின் லைல த்துல் த்ர் இரவி ் ஆ ் ட னருளால் அ ர்களுடைய ஹிருதயத்து ்கு ஞானோபதேசம் கொடு ் ப்பட்டது அந்த நுபுவ் த்து ்குப்பின் உலகத்த ரிடம் சென்று

தீனுல் இஸலாத்தை உபதேசம் புரியும்படியான ஆணையும் ஆ டவனால் அளிக்கப்பட்டது. அன்றுமுதல் மனித கோடிகளைப் பாதாளத்திலிருந்து உச்சஸ்தானத்துக்கு உயர்த்துவதே நம் நபிபெருமானின் ஓயாத வேலையாயிரு ந்து ந்தது. பொது ஜனங்களிடத்திலிருக்கும் தீய குணங் ளை யெல்லாம் போக்கி அவர்களை நல்வழிக்குக் கொண்டு வந்து ஆத்மஞான முன்னேற்றத்தில் முதிர்ச்சி யடை யும் படி செய்வதே அவர்களுடைய முக்கிய வேலையாயிருந்து வந்தது. மனிதர்கள் தமக்குள் ஒருவரோ டொருவர் இன்னவாறு நட ந்து கொள்ள வேண்டுமென்பதும், அவர் ள் ஆண்டவன் விஷயத்தில் இன்னவாறு ஒழுகிவர வே டு மென்பதுமே அவர்களுடைய போதனையின் சார மாயிருந்தது.

அவர்களுடைய நுபுவ்வத்தை முதன்முதலில் ஏற்றுக் கொண்டு முஸ்லிமானவர் அவர்களுடைய மனைவியார் கதி ஜாபீபி (ரலி) அவர்களேயாவார். அதன் பின்னர் அலீ (ரலி), அபூபக்கர் (ரலி), உமர் (ரலி), ஹம்ஜா (ரலி), உதுமான் (ரலி) முதலிய சிலர் தீனுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொண் டார்கள். ஆனால் முஹம்மதுக்கு (ஸல்) நபிப்பட்டம் கிடை த்த தென்பதை கேட்டுக் குரைஷ்குலத்தார் முதன் முத லில் பரிகசமா ப்பேசி ஏளனம் செய்தார்கள். ஆனால் நபி ள் நாயகமவர்கள் த களுடைய பிரசாரவேலையை விடா மல் மேன்மேலும் தொடர்ச்சியாகச் செய்து வரும்போது அந்தக்குரைஷ் குலத்தார்கள் நம்நபிபெருமானைத் த ரு டைய ன்மவிரோதியாய்க் ருதத் தலைப்பட்டனர். பிறகு பலவிதத்திலும் அவர் ளையும் அவர் ளைப் பின்பற்றிய ர்க ளையும் அந்த எதிரி ள் துன்பப்படுத்தத் துணிந்து விட் டனர். அ ர் ள் செய்துவந்த கொடுமையின் காரணமா

மச் சில முஸ்லிம்களும் உயிர் துறக்கும்படியான அசம்ப மும் நேரிட்டது. குறைஷ்குலக் காபிர்கள் படுத்திவைத்த பாட்டை இம்மட்டு அம்மட்டென்று வரையறுத்துக் கூறு வது முடியாது. நுபுவ்வத்து க்குப்பின் சில ருஷ ள் வரையில் அம்முஸ்லிம்கள் பட்ட ஷ்டத்திருல் அவர் ளுள்பலர் ஹபஷ்தேசத்துக்கு ஹிஜ்ரத் சென்று தம்மைப் பத்திரப்படுத்திக் கொள்ளும்படியான அவசியம் நேரிட்டு விட்டது. ஆனுல் நபிகள் நாயகமும் மற்றும்சிலரும் மட்டுமே மக்கத்தில் தைரியமாகத் தங்கி விட்டார்கள். ஆயினும் அபூத்தாலிபும் கதிஜாவும் (ரலி) உயிருடனிருக்கு மட்டும் குறைஷிகளின் கொடுமையும் சிறிது குறைவுபட்டிருந்தது; ஆனுல் அவர்களிருவருடைய மரணத்துக்குப் பின்னரே முஸ்லிம் களுக்குப் பொறுக்க முடியாத துன்பங்களெல்லாம் இழைக்கப்பட்டு வந்தன. நபிபெருமானின் நாயகியாரும் பெரிய தந்தையும் மக்காவில் உயிருடனிருந்த மட்டும் அவர்களுடைய செல்வாக்குக்குப் பயந்து குறைஷ்குலக்கா பிர்கள் சிறிது அஞ்சிக்கொண்டிருந்தனர். ஆனுல் அவர் களுடைய தேக வியோகத்துடன் அப்படிப்பட்ட அச்சமா னது அந்தக் காபிர்களுடைய மனத்தைவிட்டு அடியோடு ஒழிந்துபோய் விட்டது. மக்கத்துக் ாபிர் ளின் ெ ாடுமை யானது மிகுதமா த் தலை விரித்துத் தாண்டவமாடத் தொடங்கிவிட்ட படியால் நபி ள் நாயகமவர்கள் அவ்வூரை விட்டு அடுத்த ஊராகிய தாயிபுக்குச் சென்று அ ே யா வது உபதேசம் புரியலாமெனத் தொட ்கிஞர்கள். அ ் கேயும் மக்கத்து விரோதிகளின் துர்ப்போதனையைக் கேட்டுவிட்டு அங்குள்ளவர்கள் நபிகள் நாய மவர் ளை ் கல்லாலடி ் துத் துரத்திவிட்டார் ள். ாலில் இரத்தம்வடி யப் பாதசாரியாய் நபிபெருமாஞர் மிகவும் மனமுடைந்து

சென்றவழியே திரும்பிவந்து விட்டார்கள். அதன்பின் நபிகள் நாயகமவர்கள் சிலகாலம் மக்கத்திலேயே தங்கியிருந்துகொண்டு சில சமயங்களில் மட்டும் வெளியில் வந்து நல்லுபதேசம் புரிந்து வந்தார்கள். ஹஜ்ஜு மாதத்தில் அயலூர்களிலிருந்து மக்கத்துக்கு யாத்திரையாக வருபவர்களிடம் தங்களுடைய இஸ்லாமார்க்கத்தைப் போதித்து வந்தார்கள்; அயலூர்களிலிருந்து யாத்திரையாக வருபவரேனும் ஆண்டவனுடைய வேதத்தைக்கேட்டு அச்சங்கொண்டு தீமையை விட்டு நல்வழியில் வரக்கூடுமென்னும் நல்லெண்ணத்துடன் இவ்வாறு யாத்திரிகர்களைக்கண்டு உபதேசம் புரிந்து வந்தார்கள்.

இவ்வாறு பலகாலும் உபதேசித்துவரும்போது யதுரிப் என்னும் பட்டணத்திலிருந்து மக்கத்துக்கு யாத்திரையாக வந்திருந்த சில மனிதர்கள் நபிபிரானின் நல்லுபதேசத்தைக் கேட்டு மனமுருகி நேர்வழியிலானார்கள். தாங்கள் விக்கிரஹங்களை ஆராதனை புரிவதில்லையென்றும், விபசாரம் செய்வதில்லையென்றும், மதுபானமாவது மற்றெந்தக் கொலைகளாவது முதலிய குற்றங்களையாவது செய்வதில்லையென்றும், ஆண்குழந்தைகளைத் தங்கள் விக்கிரஹங்களுக்குப் பலிகொடுப்பதில்லையென்றும், பெண் குழந்தைகளை உயிருடன் மண்ணில் புதைப்பதில்லையென்றும், தங்கள் தகப்பனுடைய மனைவிகளைத்தாரமாய்க் கொள்வதில்லையென்றும் உறுதி செய்து கொடுத்தார்கள். இவர்கள் தங்களுடைய சொந்த ஊருக்குத் திரும்பிச் சென்றவுடன் அங்கெல்லாம் நபிகள் நாயகத்தின் பெருமையைப்பற்றிப் பேசத்தொடங்கினார்கள். தங்களைப் புராதன பாமரத்தன்மையிலிருந்து நூதன நாகரிக நிலைமைக்குக் கொண்டுவருவதற்காகத் திருநபியொருவர் மக்கமாநகரில் தோன்றியிருக்

கும் விஷயத்தை அந்த யதுரிப் நகாமுழுதும் பாத்தினார் கள். அதை கேட்ட அரபிகள் அனேகர் அடுத்த ஆண்டில் மக்கத்துக்கு வந்து தாங்களும் தீனுல் இஸ்லாத்தில் சேர்ந்துகொண்டு பரிசுத்தர்களானார் ள். அதன்பின் ஈஸவி 622 ம் ஆண்டில் யதுரிப் நகாத்திலுள்ள ர் ள் நபிகள் நாயகமவர்களைத் தங்களுடைய பட்ட த்துக்கு அழைத்து வரும்படி தூதர்களை அனுப்பிவைத்தார்கள். அரபு நாட்டில் மக்கமாநகருக்கு எதிரிடையாக அந்த யதுரிப் நகரம் இருந்து வந்ததனால் அ குள்ளவர்கள் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டு முஹம்மதுநபியையும் (ஸல்) தங்களுடைய ஊருக்கு அழைக்கிறார்களென்னும் சமாசாரத்தை கேட்டவுடன் குரைஷ்குலக் காபிர்களுக்குண்டான கோபாக்கினிக்கோர் அளவில்லை. நாயகத்தின்மீதும் அவர்களுடைய சிஷ்யர்கள்மீதும் அந்தக்கொடு காபிர்கள் கொடுள்ள ஆத்திரத்தையும் க்ஷாத்திரத்தையும் அளவிட்டு கூறுவதென்றால் அது அரிதினும் அரிதாயிருக்கும். முஸ்லிம்களுள் பலர் மிகத்தந்திரமாக யதுரிபுக்குச் சென்று சேர்ந்தார்கள்; அங்கே அவர் ளை அந்த ரவாசி ள் அதி மான பக்ஷத்துடன் அன்பா நடத்தலாயினர். ஆனால் இவ்விஷயத்தை ம காவிலுள்ள குரைஷ் குல ெ ாடுமையாளர் கேள்வியுற்றவுடன் நபிகள் நாய த்தை ெ ாலை புரிந்து விட்டால் அவர்களுடைய விஷமத்தனமா து அடியோடு ஒழிந்துபோகுமென்று தமக்குள் தீர்மா ம்செய்து ெ ாண்டார் ள். அப்பொழுது நம்முடை ய நபி பெருமானார்மட்டு அபூப கர் ஸித்தீ குடனும் (ரலி) அலீயாருடனும் (ரலி) தனியே சித்து ந்தார்கள். அ ாலையில் அல்லாஹுத் தஆலாவினருளால் அந்த ாபிர் ளுடைய ெ ாலைபாத த்தனமான தந்திர சூழ்ச்சியைத் தெரிந்து

கொண்டு நபிகரீம் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்கள் இனி மக்கத்தைவிட்டு வெளியேறி விடுவதே நியாயமான வழி யென்று தீர்மானித்துக் கொண்டார்கள். ஆதலின் அவ்வருஷம் ரபியுல் அவ்வல் மாதம் பிறை நான்கில் நபிகள் நாயகமவர்கள் அலீயாரைமட்டும் பின்னேவிட்டு விட்டுத் தாங்களும் அபூபக்கர் ஸித்தீக்கும் நள்ளிரவில் புறப்பட்டு மக்கத்தை யடுத்துள்ள தௌர் என்னும் குகைக்குள் சென்று தங்கினார்கள். குரைஷிகள் இதைத் தெரிந்து கொண்டவுடன் அலீயாரை அதிகமான துன்பத்திற் காளாக்கி விட்டு அதற்குமுன் தப்பிவிட்ட அவ்விருவரையும் தேடிச் சென்றார்கள்; நாலுபக்கங்களிலும் காலாட்களும் குதிரை வீரர்களும் பறந்து பறந்து ஓடினார்கள். பலமனிதர்கள் நபிகள் நாயகம் தங்கியிருந்த குகை யடிவாரத்திலும் தேடிக்கொண்டு வந்தார்கள்; அந்தக் குகையைச் சுற்றிலும் அவர்கள் தேடித்தேடித் திரிந்தார்கள்; தௌரின் வாயிலில் ஆள் நுழையக்கூடிய அவ்வளவு விசாலமான வழியொன்றும் இல்லாமையாலும் அங்கிருந்த சிறு வழியில் நூலிழைப் பூச்சிகள் நூல் நூற்றிருந்தமையாலும் அங்குவந்த எதிரிகள் அதற்குள் எட்டிப்பார்த்து விட்டு அப்பால் சென்று விட்டனர். அப்பொழுது அதற்குள்ளிருந்த இருவருடைய நிலைமையும் என்னவாயிருக்கு மென்று நினைக்கின்றீர்கள்! குகை வாயிலில் கொலைபாதகர்களான எதிரிகளின் காலடிச்சப்தம் கேட்டபோது உள்ளேயிருந்த அபூபக்கர் (ரலி) நபிகள் திலகத்தைப் பார்த்து, 'யாரஸூலுல்லாஹ்! நாம் இருவர்தாமே யிருக்கிறோம். அவர்கள் பலபேராயிருக்கிறார்களே; அவர்கள் நம்மைக்கண்டு கொண்டால் என் செய்வோம்?' என்று அதி ஆயாசத்துடன் மனக்கிலேச முற்றுக் கூறினார். கொலைபாதகர்களின் அதி

சமீபத்திலிருந்து கொண்டும் அப்படிப்பட்ட அபாய ர மான வேளையில் நபிகள் பெருமானாரவர்கள், 'யாஸித்தீக்! நாம் இருவர்மட்டு மிருக்கிறோ மென்று அச்சப்படவேண் டாம்; நாம் இருவராயில்லை; நம்முடன் மூன்றாவதாக ஒரு ன் இருக்கிறனென்பது -மக்குத் தெரியவில்லையா? நம' குத்துணையா அல்லாஹுத் தஆலா இருக்கும்போது ஏன் நாம் கிலேசப்படவே 'டும்? என்று தைரியமாக மறு மொழி கூறினார்கள்.

எதிரிகள் தேடிப்பார்த்துத் திரும்பிய பின்னர் நாயக மும் ஸித்தீக்கும் அ 'கே மூன்று நாள் த 'கிவிட்டு மூன் றாம் பகல் மாலையில் அதைவிட்டு வெளிப்போந்தார்கள். அ 'கிருந்து இரண்டு ஒ 'டகங்களைச் சேகரம் செய்து கொண்டு அதிக துரிதமாகப் பிரயாணம்செய்து ஒருநாள் வெள்ளிக்கிழமை யன்று (2-7-622 ஈஸவி) யதுரிப் நகரத் துக்குள் இறைவனருளால் பத்திரமாக வந்து சேர்ந்தார் கள். இதுதான் ஹிஜ்ரத் என்று தேச சரித்திரங்களில் கூறப்படுகின்றது; இந்த ஹிஜ்ரத்திலிருந்துதான் முஸ்லிம் களின் காலகணிதமென்னும் ஹிஜ்ரி ஆண்டின் கணக்கு ஆரம்பமாகின்றது*.

*ஹிஜ்ரத்துக்குப் பின்னால் பதினேழு வருஷங்கள் சென்ற பிறகே இரண்டாவது கலீபாவான உமருப்னுல் கத்தாப் (ரலி) அவர் களுடைய ஆ 'சியில்தான் முஸ்லிம்களின் சகாப்தமானது ஹிஜ்ரத் திலிருந்து கணிக்கப்பட வேண்டுமென்னும் அரசாங்க அறிக்கையா னது வெளிப்படுத்தப்பட்டது. அப்பொழுதும் நபிகள் நாயகமவர் ள் ஹிஜ்ரத்துப் புறப்ப 'ட அந்தத் தேதியிலிருந்து 'ஹிஜ்ரி ஆரம்பிக்கவில்லை. நபிகள் நாயகமவர்கள் ரபீயுல் அவ்வல்மீ பிறை 4 ஞாயிறன்று மக்கமா நகரைவிட்டுப் புறப்பட்டு அம்மாதம் 16உ யாகிய வெள்ளிக்கிழமை யன்று [கி-பி. 622, ஜூலை 2உ] மதின

# அத்தியாயம்—3.



## நபிகள் பிரானும் மதீனவாழ்க்கையும்



அல்லாஹ்வுக்காகவும் அவனுடைய ரஸூலுக்காகவும், சரீரவாழ்க்கையைக்காட்டிலும் ஆத்ம வாழ்க்கையே சிறந்ததெனக்கொண்ட மக்கத்து முஸ்லிம்கள் தங்களுடைய சொந்த ஊரையும் சுற்றத்தாரையும் மற்றுமுள்ள சொத்து ஸ்வதந்தரங்களையும் துறந்துவிட்டு ஆண்டவனுடைய நேர்வழியே பெரிதென்று கொண்டு யதுரிப் நகரத்துக்குள் வந்து சேர்ந்தவுடன் அந்நகரத்திலுள்ளவர்கள் எல்லாவிதமான மேதைமரியாதையுடனும் அன்னவரை அன்புடன் ஏற்று ஆதரிக்க முன்வந்தனர். இவ்வாறு மக்காவிலிருந்து அங்குச்சென்று அடைக்கலம் புக்கவருக்கு "முஹாஜிரீன்" என்று பெயர்வழங்கலாயிற்று. இப்படிப்பட்ட திக்கற்ற முஸ்லிம்களை அன்புடன் ஏற்றுக்கொண்ட அந்நகரவாசிகளுக்கு "அன்ஸார்"கள் என்று நாமம் சூட்டப்பட்டது. இப்பெயரின் பொருள் "உதவிபுரிவோர் என்பதாகும். அதுவரையில் அதற்குமுன் நெடுங்காலமாக வழங்கப்பட்டு வந்த "யதுரிப் என்னும் அந்நகரத்தின் பெயரானது திரு நபியவர்களின் பெருவிஜயத்தின் ஞாபகார்த்தமாக மதீனத்

---

மாநகர் சென்று சேர்ந்தார்கள். ஆனால் அதற்குப் பின்னே 17 ஆண்டுகள் கழிந்த பிறகு ஹிஜ்ரீக் கணக்கு நிலை நிறுத்தப்பட்ட போது ரபீயுல் அவ்வல் 4௳ யிலிருந்து ஆரம்பம் செய்யாமல் முஸ்லிம்வருஷத்தின் முதல் மாதமாகிய முஹர்ரம்மீ 1௳ யிலிருந்து கணிக்கத் தொடங்கினார்கள்.

னநபீ, அல்லது, 'நபிபெருமானின் நகரம் என்று அன்றுமுதல் மாற்றப்பட்டு விட்டது; இதற்குச் சுருக்கமாக மதீனு என்றும் பெயர் கூறுவர். இப்பெயர்தான் இன்றளவும் இந்நகரின் பெயராக வழங்கப்பட்டு வருகின்றது. நபிகள் நாயகமவர்கள் அந்நகரில் தங்களுடைய திருக்கரத்தின் உதவியைக் கொண்டு மண்ணாலும் பச்சைவெட்டுச் செங்கல்லாலும் ஒருமஸ்ஜிதை (பள்ளியை) கட்டி முடித்தார்கள்; அதன் மேற்கூரையானது பேரீச்சமரத்தின் மட்டைகளால் வேயப்பட்டு அதன் மீது மண் போடப்பட்டிருந்தது. அந்தச் சர்வ சாதாரணமான பள்ளிவாயிலுக்குள் நின்று கொண்டுதான் நபிகள்நாயக மவர்கள் தங்களுடைய எளிய இஸ்லாமார்க்கத்தைப் போதிக்கத் தொடங்கினார்கள். அல்லாஹுத் தஆலாவின் அன்பையும் அருளையும் அவனுடைய அருமையான பெருமையையும் மிகுதமாகக் கூறுவதோடு அம்மனிதர்களுக்கு வேண்டிய சன்மார்க்க ஒழுக்கங்களையும் அதிகமாகப் போதித்துவந்தார்கள்; அவர்கள் கொலையையும் களவையும் கள்ளையும் கொள்ளையையும் விட்டுவிட வேண்டுமென்றும் மாதாபிதாக்களிடம் மிகப்பரிசுத்தத்துடன்நடந்துகொள்ளவேண்டுமென்றும் அடிக்கடி உபதேசம் புரிந்துவந்தார்கள்; இன்னும் சூதும் கவராடலும் சிசுஹத்தியும் ஸ்திரீஹத்தியும் மகாதோஷமான காரியங்களென்று விடாமல் சொல்லிக் கொண்டே யிருப்பார்கள். மனிதவர்க்கத்தார் ஒருவரிடத்தில் மற்றொருவர் சகோதர வாஞ்சையுடன் நடந்துகொள்ளவேண்டுமென்றும் விதவைகளையும் வேறு திக்கற்றவர்களையும் அன்புடன் ஆதரிக்கவேண்டுமென்றும் அவர்கள் நற்புத்தி புகட்டிவந்தார்கள். இம்மட்டோடில்லாமல் மனிதனல்லாத மற்றப்பிராணிகளிடத்திலும் பக்ஷம் பாராட்ட

வேண்டுமென்பதையும் அ ர்கள் அம்மனிதர்களுக்கு ஞாபக மூட்டமறந்து போனதில்லை.

அவ்வேளையில் மதீனுவிலிருந்த ர்கள் இருபெரும் பிரிவினராகப் பிளவுபட்டுக்கிடந்தனர். அதற்குமுன் நெடு காலத்திலிருந்தே அ ர்கள் கக்ஷிப்பிரதிகக்ஷியை யுடைய வராயிருந்து ஒருவர்மீது மற்றொருவர் அதி மான ர்ம கொண்டவரா யிருந்தார்கள். நபிகள் நாயகமவர் ள் அந்த நகரவாசிகளின் உட்கலகங்களை யெல்லாம் ஒழித்து அவர்களை ஒன்றுபடுத்தி 'அன்ஸார்'' கள் என்னும் ஒரே பெயராலேயே வழங்கலானுர்கள். நபிபெருமானுடைய திருவவதாரகாலத்தில் அந்த அரபுநாட்டின் எந்தப்பகுதியிலும் சட்டமுறையென்பதே இன்னதெனத் தெரியாமலிருந்தது. அவரவரும் மனம்போனபடி யெல்லாம் ந ப்பதே அவரவருக்கும் சட்டமாயிருந்து ந்தது; இதனுல் அரபி ஙின் கூட்டத்தார்ஒருவரோடொருவர்சண்டையிட்டுக்கொ ண்டேயிருப்பர். அவர்களுடைய மனஸ்தாபத்தையும் மாற்சரியத்தையும் போக்கி எல்லோரையும் ஒருவிதமான கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவரக்கூடிய எவ்வகைச் சட்டதி மும் எக்காலத்திலும் அங்கே யிருந்ததில்லை. ஆதலின் நம்முடைய நபீகரீம் (ஸல்) அவர்களுடைய முதல்வே லையானது அந்த மதினமாநகரில் ஒருவிதமான ஒழுங்குள்ள நியதிமுறையை ஏற்படுத்தி அ குள்ள மனிதர் ளை யெல்லாம் அதற்கு ட்டுப்பட்டு நடக்கும்படி செய்வதாகவே யிருந்தது. சமூ வாழ் ை க்குரிய சரியான ழியை அ ே ஏற்படுத்த ே டுமென்பது அன்னுரின் ஆரம்ப நோ மா யிருந் ந்தது. இ கருத்தை மனத்தில் வைத்துக்கொ ண்டு நபி ள் நாயகம ர்கள் ஒரு சுற்றுவி ாம்பரத்தை வெளிப்படுத்திஞர் ள். இ,னுல் அந்த ரத்திலிருந்த

எல்லா இரத்தக்கொலையான ச ைட ளும் சச்சரவுகளும் அடியோடொழிந்தன; அவர ரும் சட்டமுறைமை குக் ட்டுப்பட்டு நட கமுற்பட்டனர். மதீனாவிலும் அதைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலும் மிகுதமான எஹூதிகள் (யூதர்கள்) வசித்துவந்தார்கள். முஸ்லிம்களுக்குக் கொடுக் கப்பட்ட முழுப்பாத்தியமும் அந்த எஹூதிகளுக்கும் அளிக் ப்பட்டது; அஃதாவது, சட்டமுறைப்படி முஸ்லிம் ளு கும் யூதர் ளுக்கும் சமமான யோக்கியதையே ெ ாடுக்கப்பட்டிருந்தது. இதற்கு ஈடாக அந்தயூதர் ள், மதினமாநகரை எதிரிகளின் தாக்குதல் ளினின்றும் காப் பாற்றவேண்டிய காலங்களில் தா களும் முஸ்லிம்களுக்கு வேண்டிய எல்லா விதமான உதவியும் புரிவதாகத் தங் ளைக் கட்டுப்படுத்திக் கொ டார்கள்.

யதுரிப் நகரத்துக்கு நபியாகம டும் சென்ற நம்மு டைய நாயகமவர் ள் அதி சீக்கிரம் அவ்வூரின் ஸிவிலும் கிரிமினலும் சம்மந்தமான நியாயாதிபதியாகவும் ஆகும் படியான அவசியம் நேரிட்டு விட்டது. மக்கத்து முஹாஜி ரீன்களுக்கும் மதீனத்து அ ன்ஸார்களுக்கும் ஞானாசிரிய ரா இருப்பதோடு அவர்களுக்கும் அ குள்ள எஹூ திகளு கும் இடையில் நியாயாதிபதியா யிருந்துெ ா டு அந்நகரத்தின் பாது ாப்பையும் தம்மீது ஏற்றுக்கொள்ள வேண்டிய கடமையையும் மேற் போட்டு ெ ாண் டார் ள். ஆதலின் இந்நகரமானது எதிரிகளின் தாக்கு தல்களுக்கு இலக் ாகி விடாமலும் உள்ளூருக்குள்ளேயே பொதுநன்மை கு விரோதமான கல கள் ஏற்படா மலும் ஹு. கருத்துமாயிருந்து காத்துக்கொள்ள ே டிய எல்லாவிதமான பொறுப்பும் எம்பெருமானையே சார்ந்ததாய் விட்டது. மதீனாவின் விஷயம் இவ் ாறிருந்து

வரும்போது மக்கத்திலுள்ள காபிர்களெல்லாம் மதீனத்தின்மீது ஆத்திரப்பட ஆரம்பித்தனர். தாம் ஒருநபியென்று பொய்புரை செய்துவந்த முஹம்மதுக்கும் (ஸல்) அவருடைய சிலசிஷ்யர்களுக்கும் யதுரிப்வாசிகள் புகலிடம் கொடுத்து ஆதரித்ததுமல்லாமல் அந்த அப்துல்லாவின் மகனைத் தங்களுக்குத் தலைமையாகவும் ஆக்கிக்கொண்டார்களென்னும் புழுக்கமும் பொறாமையுமே அந்தமக்கத்துக்காபிர்களின் மனத்தை மிகவும் உறுத்திக் கொண்டிருந்தது. இதனால் அவ்விரு நகரத்தார்களுக்கிடையில் யுத்தம் நிகழாமற் போகக் காரணமில்லை. பலகாலும் புகைந்துகொண்டிருந்த புழுக்கமானது இறுதியில் பதுருயுத்தமாக வந்து மூண்டது. மக்கத்துக்கருகிலுள்ள பதுரென்னும் பள்ளத்தாக்கில் முந்நூற்றுப்பதின்மூன்று முஸ்லிம்களும் ஆயிரத்திற்குமேற்பட்ட அராபிக்காபிர்களும் யுத்த சன்னத்தராய் வந்து நின்றார்கள். அப்பொழுது ஆண்டவனருளால் முஸ்லிம்கள் வெற்றியடைந்து மக்கத்துக்காபிர்கள் முறியடிக்கப்பட்டார்கள். இவர்களுள் முக்கியமான அபூஜஹ்ல் அபூலஹப் முதலிய சிலர் இறந்ததுமல்லாமல் மற்றும்பலர் முஸ்லிம்களிடத்தில் யுத்தக்கைதிகளாகவும் அகப்பட்டுக்கொண்டார்கள். அந்தக்கைதிகளெல்லாம் மதீனாவில் அதிக மரியாதையுடன் நடத்தப் பட்டார்கள்.

ஹிஜ்ரி இரண்டாவது வருஷத்திலும் மக்கத்து மனிதர்களால் மதீனாவில் அடிக்கடி தொந்தரைகள் உண்டாகாமலிருக்கவில்லை. முஹம்மது (ஸல்) நபியையும் அவருடைய மார்க்கத்தையும் அடியோடொழிக்கு மட்டும் அந்தக் கொடுங் காபிர்கள் சற்றும் சும்மா இருப்பதில்லை யென்று கங்கணம் கட்டிக்கொண்டார்கள். ஆதலின் ஹிஜ்ரி மூன்றாவது ஆண்டில் ஹாஷிம் வம்சத்தாரின் ஜன்மவிரோதியா

ய உ மயாவின் பௌத்திரனாகிய அபூஸுபியான் என்பவன் ம ̇ த்து மனிதர் ளேயும் அ ர்களேச் சார்ந்த ர் ளேயும் ஒரு பெருஞ் சேனையாகத் திரட்டிக் கொ ̇ டு மதீனத்தின்மீது படையெடுத்து ந்தா ̇ ர்; இந்த எதிரி ளை எதிர் ̇ கும் பொருட்டு மதீனத்திலிருந்து வந்த முஸ்லிம் ளின் தொகை மிகச்சிறிதாயிருந்தது. அப்பொழுது உஹு தென்னும் மலையடிவாரத்தில் அவ்விருதிறத்தாருக் கிடை யில் ஒரு யுத்தம் நி ழ்ந்தது; அச்சமயத்தில் நபிகள் நாயக மவர்களுடைய த்தரவுக்கு மீறிச் சில வில்லாளிகள் தம் முடைய யதாஸ்தானத்தை விட்டுப் பெயர்ந்து விட்டபடி யால் முஸ்லிம்கள் தோல்வியடையும் படியான அஸந்தர்ப் பம் நேரிட்டுவிட்டது. ஆயினும் மக்கத்து ̇ காபிர்களுள் ளும் பெருத்தநஷ்டம் ஏற்பட்டுவிட்டபடியால் அவர்களும் மதீனத்தின்மீது செல்லாமல் த ̇ ளூரு ̇ கே திரும்பிச் செல்லும்படியான அவசியம் நேரிட்டுவிட்டது. அதன் பின்னர் மதீனாவிலும் அதைச் சுற்றியுள்ள இட ̇ களிலும் போதுமான அர ̇ ளேயுடைய பாதுகாப்புள்ள ஸ்தல ̇ ளில் வசித்துவந்த யூதர் ள் நபிபெருமானுக்கு அதி மான தொந்தரையை ̇ ெ ாடு ̇ த் தலைப்பட் னர். அவர் ள் த ̇ களுடைய பத்திரமான இட ̇ ளிலிருந்து கொண்டு சிறு தொகுதியினராகிய மு ̇ லிம் ளே அடிக் டிதுன்புறுத் தி ̇ ெ ா ̇ டிருந்தார்கள். மதினமாந ரு ̇ குள் வாழ்ந்து வந்த எஹூதிகள் மக்கத்திலிருந்த எதிரிகளுக்கு அந்த ரங்கமான உளவர் ளாயிருந்து கொண்டு முஸலிம் ளு ̇ கொரு பேராபத்தாய் விளேந் விட்டார் ள். இந்தயூதர் ளு டைய சதியாலோசனைதான் அந்த முஸ்லிம் ளுக்கு அடி ̇ டி மன ̇ க லேயை உ ̇ டுப ̇ ணி ̇ கொ ̇ டிருந்தது; இவர் ளுடைய தொந்தரையால் மதீனாவில் ல ̇ களும்

கொலைகளும் அதிகமாக நடக்கத் தலைப்பட்டன. இதனால் மதீனவின் சுற்றுப்புறத்திலிருந்த இரண்டு யூதகுலத்தார் வெளியேற்றப் பட்டனர்.

மீண்டும் ஹிஜ்ரி ஐந்தாம் ஆண்டில் மக்கத்து வாசிகள் பதினாயிரம் படையைத் திரட்டிக்கொண்டு பெருஞ்சேனையாக வந்து மதீனவைச்சூழ்ந்து வளைந்து கொண்டார்கள். இப்படிப்பட்ட பெருந்திரளான சேனையை எதிர்க்கும் பொருட்டு முஸ்லிம்களால் மூவ்வாயிரத்துக் கதிகமான சேனையைத் திரட்டமுடியவில்லை. அப்பொழுது நபி (ஸல்) அவர்களுடைய அனுமதியின் பிரகாரம் முஸலிம்கள் மதீனவின் பாதுகாப்பில்லாத பக்கத்திலெல்லாம் ஓர் ஆழிய அகழை வெட்டினர்கள்; மதீனவுக்குத் தெற்கில் அதிசமீபத்தில் பனூகுரைஸா என்று சொல்லப்படுகின்ற யூதகுலத்தாருக்குச் சொந்தமான பல கோட்டைகளிருந்தன; இவர்கள் முஸ்லிம்களுடன் செய்து கொண்டிருந்த உடன்படிக்கையின் பிரகாரம் தங்களுடைய கோட்டைகளிருந்த இடத்தின் வழியே எதிரிகளுக்கு இடங்கொடுக்க மாட்டார்களென்று நபிகள் நாயகம் நம்பியிருந்தார்கள். ஆனல் அந்தயூதர்கள் தங்களுடைய சத்தியத்திற்கு மாற்றமா மக்கத்து எதிரிகளுடன் சேர்ந்து கொண்டு மதீனவின் மீதே எல்லோரும் எதிர்க்கத் தொடங்கினர்கள். மதீனவின் மீது எதிரிகள் போட்ட முற்றுகையானது அநேக நாள் வரையில் அதிமும்முரமாக நடைபெற்று வந்தது; ஆனல் நம்முடைய நபிகள் நாயகமவர்கள் அதிஜாக்கிரதையா விழித்துக்கொண் டிருந்ததனல் மதினமாநகரமானது மக்கத்தார் கைவசம் அகப்பட முடியாமற் போய்விட்டது. பனூகுரைஸாவின் சதியால் மதீனவானது அச்சமயம் எதிரிகளின் கையில் சிக்கியிருக்குமாயின் நபிபெருமானின் கதி

யும் இஸ்லாத்தின் ெ ற்றியும் என்ன ா யிரு 'குமென்று நாம் நன்கு நிதானித்து' ெ ாள்ளலாம். ஆனுல் நபிகள் நாயகத்தின் சாமர்த்தியமே எல்லா விதமான தோல்வியை யும் , டுத்து விட்டது. ம'கத்த ரின் முற்றுகையானது நெடுநாள் மட்டும் நிகழ்ந்து ரும்போது ஆ ' ட னரு ளாலு ' டான பெருமழையாலும் பேரிடியாலும் எதிரி ளின் சேனேகளும் அவர் ளின் குதிரைகளும் மிகுதமா மாளத்தொட 'கின. அவர்களுடைய நஷ்டமானது இம் மட்டோடு போகாமல் அன்ன ரின் ஆகாராதிகளேயும் தொலேக்கத் தலேப்பட்டது; இதனுல் அந்த எதிரிகள் அதி கமான கஷ்டத்து னும் மிகுதமான நஷ்டத்துடனும் த' களுடைய சொந்த ஊராகிய மக் த்து'குச் செல்லும்படி யான நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

இப்படிப்பட்ட சதிகாரராகிய பனூகுறை ாவின் ம் சத்தார்களே மதீனுவுக்கு அதிசமீபத்தில் வைத்திருந்தால் அவர்களால் அந்ந ருக்கு எப்பொழு ம் ஆபத்தே வரு மெனக்கண்ட முஸ்லிம்கள் அவர் ளேப்பற்றிப் பெரிதும் வலே கொண்டார் ள். இவர்களுடைய நம்பிக்கை மோசத் தால் எந்த நேரத்திலும் முஸ்லிம் ள் எதிரி ளின் வாளுக்கு இரையாய் விடலாம். ஆதலின் அ ர் ள் இனிமேல் மதீனு வைவிட்டு வெளியேறிவிட வே 'டுமென்று ே ட்டு' கொள்ளப்பட்டார்கள். அதற்கு அ ர்கள் மறுதளிக்கவே முஸ்லிம்கள் அவ் வம்சத்தினரை முற்றுை போட்டனர். சிறிது பொழுதைக்குள் அந்த யூதர் ள் ஒடுக்கப்பட்டுச் சமாதானத்துக்கு உட்படு தா வா 'குறுதி கூறினுர் ள். உடனே நபிகள் நாயகமவர்கள் அ ர் ளே விடுதலே செய்து எவ்வித நிபந்தனேக்கு அ ர்கள் உட்பட,' தயாராயிருக்கி ருரென்று ே ட்டார் ள். அதற்கு அந்த யூதர் ள் , ' ளு

டைய தலைவரான ஸஅத் பின் முஆஸ் என்பவருடைய தீர்மானத்துக் கல்லாமல் மற்றெவருடைய தீர்மானத்துக்கும் கட்டுப்படவே மாட்டோ மென்று ஒரே பிடிவாதமாச் சாதித்து வந்தார்கள். அவர்களுடைய மூர்க்கமான கோரிக்கையின் படியே நம்முடைய நபிபெருமானாரவர்களும் ஸஅத் பின் முஆஸ் என்பவருடைய தீர்மானத்தின் பிரகாரம் தாங்களும் கட்டுப் படுவதாய் ஒத்துக் கொண்டார்கள். அவர் ஒருசுத்த வீரராயும், அந்த மதீனவின் முற்றுகையில் தாம்பட்ட காயத்தின் கொடுமையினுல் மறுநாள் உயிர் துறக்க வேண்டிய வராயும் இருந்ததனுல் அந்த யூதர்கள் செய்த சதிமோசமான காரியத்தைக் கண்டு மிகவும் வெறுப்புற்று ராணுவச்சட்ட முறைமையின் பிரகாரம் அந்தயூத குலத்திலுள்ள எல்லாவீரபுருஷர்களும் சிரச்சேதம் செய்யப்பட வேண்டுமென்றும், அவர்களுடைய பெண்டுகளும் பிள்ளைகளும் முஸ்லிம்களிடம் யுத்தக்கைதிகளாகப் போய் வி வேண்டு மென்றும் கடுமையான கட்டளை யிட்டார்.

இப்படிப்பட்ட கடுமையான தீர்ப்பை நிறைவேற்றும் விஷயத்தில் நம் நபி பெருமானுக்கு விருப்பமில்லாமற் போயினும், அந்த யூத குலத்தார் அதற்கு முன் அந், ஸஅதின் தீர்ப்பின் பிரகாரமாக மட் டுமே நடப்பதாக ஒத்துக்கொண்டிருப்பதாலும் அதற்குக் கட்டுப்படுவதாய் நபி ள் நாயகமும் வாக்குறுதி செய்திருப்பதாலும் அந்தக் கொடிய தண்டனையை வேறு விதியில்லாமல் நிறைவேற்றி வைத்தார்கள். யுத்தகாலச் சட்டத்தின் பிரகாரமும் அந்த யூதர்களின் தலைவருடைய தீர்ப்பின் பிரகாரமுமே இந்தத் தண்டனை யானது விதிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டது. இதிலொன்றும் அநியாயமாவது ஆச்சரியமாவது இல்லை.

இப்படி யெல்லாம் பலவழியிலும் முயன்று பார்த்து

மக்கத்து எதிரிகள் தங்களுடைய காரியத்தில் சிறிது தளர்ச்சியடைந்து போகவே அரபு நாட்டிலுள்ள மனிதர்கள் கூட்டங் கூட்டமாகத் தங்களுடைய பண்டைக்காலப் பாரம்பரியத்தையெல்லாம் கைவிட்டு விட்டுப் பழய ஆலவிக்கிரஹங்களையும் அடியோடு துறந்து இஸ்லாமார்க்கத்தைத் தழுவினார்கள். அப்பொழுது இஸ்லாமல்லாத ஏனை மதவாதிகளுக்கெல்லாம் அவரவருடைய தத்தம்முடைய மதத்தை அனுஷ்டித்து வரும்படியான சர்வசுதந்தரமும் கொடுக்கப்பட்டது. ஸீனய்மலையிலும் அதைச் சூழ்ந்துள்ள பகுதிகளிலும் வசித்து வந்த கிரிஸ்தவர்கட்கும் இப்படிப்பட்ட மதசுதந்தரம் கொடுக்கப்பட்டது. அவர்களுடைய ஆலயங்களை இடிக்கக் கூடாதென்றும், அவர்களுடைய பாதிரிமார்களைத் துரத்தக் கூடாதென்றும், இஸ்லாத்தைத் தழுவும்படி அவர்களைக் கட்டாயப் படுத்தக்கூடாதென்றும், அவர்கள் மீது அக்கிரமமான வரிகளை விதிக்கக் கூடாதென்றும், அவர்களுடைய பெண்களை முஸ்லிம்கள் விவாகம் செய்து கொள்வார்களாயின் அவர்களுக்கு மதசுதந்தரம் கொடுக்க வேண்டுமென்றும், அவர்களுடைய யாத்திரிகர்களைத் தடைசெய்யக் கூடாதென்றும் கடுமையான கட்டளை பிறப்பிக்கப்பட்டது. கிரிஸ்தவர்களுடைய ஆலயங்களையும் மடங்களையும் கட்டும் விஷயத்திலும் அவர்களுடைய மதசம்மந்தமான காரியங்களைச் சீர்செய்யும் விஷயத்திலும் உதவிவேண்டியிருக்குமாயின் அப்பொழுது முஸ்லிம்கள் உபகாரம் புரியவேண்டுமென்றும் உத்தரவிடப்பட்டார்கள்.

நபிகரீம் (ஸல்) அவர்கள் பாரஸீகத்திலுள்ள குஸ்ரவ் சக்ரவர்த்திக்கும் ரூம் தேசத்திலுள்ள கிரிஸ்தவ மன்னருக்கும் தங்களை அல்லாஹ்வின் தூதராக ஒப்புக்கொண்டு

தினால் இஸ்லாத்தைத் தழுவும்படி தூதனுப்பினார்கள். ரூம் தேசத்து மன்னர் மட்டும் நபியுல்லாஹ் வின் தூதரை மிகு மரியாதையுடன் வரவேற்று உபசரித்தார். ஆனால் பாரஸ கத்தின் மன்னனோ தன்னிடத்தில் வந்த தூதரை அதிக மாக அவமரியாதை செய்து துரத்திவிட்டான். அதைக் கேட்டவுடன் நபிகள் நாயகமவர்கள் அந்தக்குஸ்ரவின் ராஜ்யமும் இப்படித்தான் அவமானப் பட்டுப்போம் என்று முன்னறிக்கை செய்தார்கள். ரூம் தேசத்துக்கு உள்ளடங்கிய மற்றொரு கிரிஸ்தவ சிற்றரசனிடம் ஒரு தூதர் அனுப்பப்பட்டார்; இவன் திமிஷ்க் நகருக்கருகில் ராஜ்யாதிகாரம் செலுத்திவந்தான். இவன் தன்னிடத்தில் வந்த நபியுல்லாவின் தூதரை மகா கொடூரமான விதத்தில் கொலை புரிந்து விட்டான். அதற்குச் சமாதானம் கேட்டதி லிருந்துதான் முஸ்லிம்கள் மீது கிரிஸ்தவர்கள் வர்மம் பாராட்டத் தொடங்கினார்கள். இதனால்தான் இஸ்லாத் தின் மீது இல்லாதபழியை யெல்லாம் அக்கிரிஸ்தவர்கள் சுமத்திவருகிறார்கள்.

அதன் பின் அடிக்கடி யூதர்கள் கலகம் செய்து வந் தார்கள். நபிகள் நாயகமவர்கள் அந்தக் கலகக் காரர்களை யெல்லாம் அடக்கி அவர்களையும் தங்களுடைய ஆட்சியின் கீழ்க் கொண்டுவந்து அவர்களுடைய பாதுகாப்புக்காக ஒரு வித வரியைமட்டும் வசூல் செய்து கொண்டு அவர்களு டைய நிலத்திலும் மதத்திலும் பூரண சுதந்தரம் கொடுத்து விட்டார்கள். அதன் பின் நபிபெருமானாரவர்கள் ஹஜ்ஜுக் குப் புறப்பட்டார்கள்; அப்பொழுது முஸ்லிம்களுக்கும் மக்காக் காபிர்களுக்கும் இடையில் ஏற்பட்டிருந்த சமா தான உடன் படிக்கையின் பிரகாரம் முஸ்லிம்களுக்கு இடையூறு செய்யக்கூடாதென்று அம்மக்கத்து மனிதர்

கள் மூன்று தினம் வரையில் வெளியே சென்று விட்டார் கள். அதற்குள் நபிபெருமானும் அவர்களுடைய தோழர் களும் தங்களுடைய ஹஜ்ஜை முடித்துக்கொண்டு மதினமா நகருக்குத் திரும்பி விட்டார்கள். அதன் பின் சிறிது நாளை க்குள் முஸ்லிம்களுடன் உடன்படிக்கை செய்துகொண் டிருந்த பனூகுஸ்ர் என்னும் ஒரு கூட்டத்தாருடன் மக்கத்துக்காபிர்கள் சண்டைசெய்து அவர்களுள் அனேக மனிதர்களைக் கஅபாவுக்குள் கொலைபுரிந்து விட்டார் கள். மக்கத்து மனிதர்கள் செய்துவந்த அக்கிரமத்துக் கும் அநியாயத்துக்கும் ஓர் அளவென்பதே இல்லாமலிருந் தது. அவ்வாறிருக்கும் போது அவர்களுடைய கையில் வதையுண்ட கூட்டத்தார் தங்களுடைய உடன்படிக்கை யின் பிரகாரம் நபிபெருமானவர்களை உதவிக்கழைத் தார்கள். நியாயமுறைப்படி அக்கூட்டத்தாருக்கு உதவி புரிய வேண்டியது நம்முடைய நபிபெருமானின் கட மையாயிருந்தது. ரஸூல் நாயகமவர்கள் கேட்டனுப்பிய வினாவிற்கு ஒன்றும் மக்கத்தார் தக்கவிடையளிக்காமை யால் பதினாயிரம் முஸ்லிம்கள் அந்தக் கொடுங்காபிர்களின் மீது படையெடுத்துச் செல்லும்படி புறப்பட்டார்கள். நபிகள் நாயகமவர்களே அப்பொழுது அவர்களுக்குத் தள பதியாயிருந்தார்கள்.

அவர்கள் அவ்வாறு செல்லும்போது வழியில் இரண் டொருவரால் செய்யப்பட்ட சிறுசிறு அற்பத்தடையை யல்லாமல் வேறொருவிதமான எதிர்ப்பையும் அவர்கள் காணவில்லை. தங்களுக்கும் தங்களுடைய தோழர் களுக்கும் அளவுக்குமீறிய கொடுமைகளைப் புரிந்துவந்த அந்தமக்கமாநகருக்குள் நம்ரஸூல் நாயகமவர்கள் யாதொ ருவிதமான தட்டுத் தடங்கலுமில்லாமல் எதேச்சையாய்

உள்ளே நுழைந்து அதைக்கைப்பற்றிக் கொண்டார்கள். இப்பொழுது அந்நகரமுழுதும் நபிபெருமானின் காலின் கீழ்ச் சிக்கிக்கொண்டிருந்தும் தங்களுக்கு அந்நகரத்தார் செய்த பழைய கொடுமைகளையும் துன்பங்களையும் அடியோடு மறந்து அந்த எதிரிகளையெல்லாம் நபிபெருமானவர்கள் முழுதும் மன்னித்துவிட்டார்கள். அவர்கள் அந்த மக்கத்தைப்பிடித்ததற்காக ஒருதுளி இரத்தத்தையும் சிந்தவில்லை. நபிகள் நாயகத்தைப் பின்தொடர்ந்து சென்ற தோழர்களெல்லோரும் தங்களுடைய நாயகத்தைப்போலவே தங்களுஞ் சாந்தத்துடனும் சமாதானத்துடனும் அந்நகருக்குள் பிரவேசித்தார்கள். அப்பொழுது ஓர் உயிரும் கொல்லப்படவில்லை; ஒரு வீடும் கொள்ளையடிக்கப்படவில்லை ஒருமாதும் மானபங்கப் படுத்தப்பட வில்லை. இதனால்தான் இந்த மக்கமாநகர் பிடிபட்டதேபோல் வேறெந்த நகரும்பிடிபட்டதாக யாதோர் உதாரணமும் தேசசரித்திரங்களில் எங்கேயும் காணப்படவேயில்லையென்று சரித்திர ஆசிரியர்கள் புகழ்ந்து கூறுகிறார்கள். ஆனால் அவர்களுடைய விக்கிரஹங்கள் மட்டுஞ் சிறிதும் தாக்ஷண்யமில்லாமல் சிக்கிரகமாக்கப்பட்டன. அப்பொழுது மக்கத்தவரெல்லாம் தங்களுடைய பழைய தெய்வங்கள் தகர்க்கப்பட்டு விடுவதைக்கண்ணாரக்கண்டு கொண்டே யிருந்தார்கள்; அப்பொழுதே நபிகள் நாயகமவர்கள், "உண்மையானது உதயமாய் விட்டது. பொய்யானது பறந்துவிடும்; நிச்சயமாகவே பொய்யானது சீக்கிரம் அழியக் கூடியதாயிருக்கிறது, என்னும் வேதவாக்கியத்தை ஓதிக்கொண்டே அவ்விக்கிரஹங்களை யெல்லாம் அப்புறப்படுத்தினார்கள் அப்பொழுதுதான் தங்களுடைய தெய்வங்களுக்கு அல்லாஹுத் தஆலாவின் முன் அதிகாரமொன்றும் செல்லவில்லை யென்பதைக் கண்டுகொண்டார்

கள். அதன்பின் எல்லோருக்கும் ஞானோதயமுண்டாய் அனைவரும் தீனுல் இஸ்லாத்தில் சேர்ந்து கொண்டார்கள்.

ஹிஜ்ரி ஒன்பதாம் ஆண்டில் அரபுதேசத்தின் பல பாகங்களிலுமிருந்து பற்பல விதமான கூட்டத்தார்கள் தங்களுடைய தூதர்களை அனுப்பி இஸ்லாமார்க்கத்தில் சேர்ந்துகொண்டார்கள். அரபிகளின் புராதன வழக்கப்படி அந்தத்தூதர்களெல்லாம் அதிகமான மரியாதையுடன் நடத்தப்பட்டார்கள். அவர்களுடைய வழிச்செலவுக்கும் போதுமான சகாயம் செய்யப்பட்டார்கள். அத்தூதர்கள் திரும்பிச்செல்லும்போது அவர்களுடன் இஸ்லாமார்க்கத்தைப் போதிக்கக்கூடிய முஸ்லிம்களும் உடன்சென்று அந்த அந்தக் கூட்டத்தார்களையும் நேர்வழியில் திருப்புவது வழக்கமாயிருந்தது. அப்படிச் செல்லும் இஸ்லாமிய பிரசாரகர்களுக்கெல்லாம் அடிக்கடி நம்நபிகள் நாயகமவர்கள் பின்வருமாறு புத்திகூறி யனுப்புவார்கள்: "அங்குள்ள மனிதர்களிடத்தில் மிகமரியாதையுடன் நடந்துகொள்ளுங்கள்; அவர்களைக் கடுமையாய் நடத்தவேண்டாம்; அவர்களை நிந்தனை செய்யாமல் சந்தோஷப் படுத்துங்கள். மேலும் அங்கெல்லாம் பழயவேதங்களுக்குரிய மனிதர்கள் பலர் உங்களைக்கண்டு மோக்ஷத்துக்கு வழி யாதென்று கேட்பார்கள். ஆண்டவன் ஒருவனென்பதை ஒத்துக்கொண்டு மனிதர்களுக்கு நன்மை செய்வதுதான் அதற்குரிய வழியென்று விடைபகருங்கள். அரபுநாட்டிலிருந்த சண்டைகளெல்லாம் ஒழிந்து எல்லாவிதமான எதிரிகளும் தொலைந்து அங்குள்ள மனிதர்கள் கூட்டங் கூட்டமாக வந்து தீனுல் இஸ்லாத்தைத் தழுவிக்கொள்வதை நோக்கி ரஸூல் நாயகமவர்கள் தங்களுடைய காரியத்தில் முழு

வெற்றியும் அடைந்துவிட்டதாக எண்ணி ஆண்டவனுக்கு வந்தனை புரிந்தார்கள்.

தங்களுடைய இகலோக காரியமானது முழுதும் வெற்றியடைந்து விட்டதனால் இனித்தாங்கள் பரலோகத்துக்கே செல்லவேண்டி யிருக்குமென் றுணர்ந்துகொண்டு நபியுல்லா அவர்கள் தங்களுடைய அந்தியத்துக்கு முன் ஒருமுறை ஹஜ்ஜுக்குச் சென்று திரும்ப வேண்டுமென் னும் எண்ணத்துடன் ஹிஜ்ரி பத்தாம் ஆண்டு, துல்க அதா மாதம், பிறை 25ல் 1,75,000 முஸ்லிம் தோழர்களுடன் மக்காவை நோக்கிப் புறப்பட்டார்கள்.

இந்த இலக்ஷத்து எழுபத்தைந்தாயிரம் முஸ்லிம்களுடன் எம் பெருமானாரவர்கள் அந்த மக்கமா நகரத்தின் அருகிலுள்ள அரபாத்து மைதானத்தில் வந்து கூடினார்கள். ஹஜ்ஜுக்குரிய வைபவமெல்லாம் செவ்வனே சந்தோஷகரமாக முடிவடைந்தவுடன் நம் ரஸூல் நாயகமவர்கள் அன்று மாலையில் தங்களுடைய கஸ்வா என்னும் ஒட்டகத்தின் முதுகின்மீது ஏறித் தாங்கள் மனித கோடிகளுக்கு அறிவிக்க வேண்டிய இணையில்லாத இறுதி யுபதேசத்தைச் செய்யத் தொடங்கினார்கள். அவர்களுடைய இகலோக வாழ்வானது அதற்குப்பின் அதிசீக்கிரம் முடிவு பெறப் போகிறதென்பதை முன்னறிந்து கொண்ட அந்தத் திருநபியவர்கள் தங்களுடைய ஆயுள்முழுதும் செய்து வந்தகாரியத்தின் முக்கிய நோக் மாகியஏகதெய்வக்கொள் கையையும ஏக சகோதரத்து வத்தையும அங்கே அதிக விளக்கமாகவும் மிகச் சுருக்கமாகவும் எல்லோருக்கும் எடுத்துரைக்க ஆரம்பித்தார்கள்.

எல்லா வுலகங்களுக்கும் இரக்ஷகனான ஏகபராபரக் கடவுளினது இணையற்ற தூதராகிய எம்பெருமானார்

முஹம்மது முஸ்தபாரஸூல் ஸல்லல்லாஹு அலைஹிவ ஸல்லமவர்கள் அந்த ஆண்டவனது ஆகாயமென்னும் நீல விதானத்தின் கீழிருந்து கொண்டு தங்களுடைய ஒட்டகத்தின் முதுகிலிருந்தபடியே மனிதர்களின் சகோதரத்துவத்தைக் குறித்துப் பின் வருமாறு கூறத் தொடங்கினார்கள்: 'அரபிகள் அஜமி (அரபியல்லாதவர்) களைக் காட்டினும் மேம்பட்டவரல்லர்; அல்லது அஜமிகளும் அரபிகளைக் காட்டினும் மேம்பட்டவரல்லர். நீங்களெல்லோரும் ஆதத்தின் மக்களே; ஆனால் அந்த ஆதமோ மண்ணிலிருந்து படைக்கப்பட்டார். இவ்வாறு சொல்லி மனிதர்களுக்கிடையிலுள்ள ஜாதி பேதத்தையும் நிற வேற்றுமையையும் அந்தஸ்து வித்தியாசத்தையும் அடியோடொழித்து விட்டார்கள். அன்று முதல் இன்றளவும் எங்கள் இஸ்லாமார்க்கமானது மனித ஜாதியென்னும் ஒரே ஜாதியைத் தவிர வேறு ஜாதியை அறிந்ததே யில்லை.

ஆடவரைக் காட்டினும் பெண்டிர் தாழ்ந்தவரென்று மற்றுஞ் சில மதவாதிகள் கூறுவதையும் எம் இஸ்லாமானது இம்மியளவும் இல்லாமல் செய்து விட்டதென்னும் உண்மையையும் எம்பெருமானாரவர்கள் அன்று மகா அழுத்தமாக வற்புறுத்திக் கூறினார்கள்: 'உங்களுடைய பெண்டுகளை நடத்தும்விஷயத்தில் நீங்கள் ஆண்டவனுக்கு அதிகம் அஞ்சவேண்டும்; பெண்களின் மீது உங்களுக்குச் சில பாத்தியதைகளிருப்பதேபோல் அவர்களுக்கும் உங்கள் மீது சில பாத்தியதைகளுண்டு.' இங்ஙனம் ஆண்களுக்குப் பெண்டிர் எவ்விதத்திலும் தாழ்ந்தவர்களல்லவென்பதை நிலை நிறுத்தினார்கள். பிறகு அடிமைகளின் விடுதலையைப்பற்றிப் பேசிவிட்டு அவர்களையெல்லாம் அடிமைத் தனத்தினின்றும் விடுவிப்பதுடன் தங்களுடைய

இஸ்லாமிய சகோதரத்துவத்திலும் அவர்களை அங்கத்தின ராக அமைத்துக்கொள்ள வேண்டுமென்றும் வற்புறுத்திக் கூறினார்கள்.

பின்னரும் அங்கே கூடியிருந்த 1,75,000 மனிதர்களின் முன்னிலையிலும் நம் ரஸூல் நாயகமவர்கள் "இன்று எந்த நாளென்பது உங்களுக்குத் தெரியுமா? குர்பானி கொடுக்கவேண்டிய ஈதுல்அல்ஹா தினம் இன்றல்லவோ?" என்று கேட்டார்கள்; அதற்கவர்கள், "ஆண்டவனுக்கும் அவனது திருநபியவர்களுக்குமே நன்கு தெரியும்,' என்றார்கள். "இது என்னமாதமென்பது உங்களுக்குத் தெரியுமா? இது ஹஜ்ஜு மாதமென்னும் பரிசுத்த காலமன்றோ?' என்று நபி பெருமானார் கேட்டார்கள்; அதற்கும் முன்போலவே மறுமொழி கூறினார்கள். "இது எந்த இடமென்பது உங்களுக்குத் தெரியுமா? இது பரிசுத்த பூமியாகிய மக்கமா நகரமன்றோ?" என்று கேட்டார்கள்; அதற்கும் அப்படியே விடை பகர்ந்தார்கள். இவையெல்லாம் அந்த முஸ்லிம்கள் ஒத்துக்கொண்டவுடன் நம்திருநபியவர்கள் பின்வருமாறு அவர்களுக்கு அறிவுறுத்தலாயினார்: "நீங்கள் இதுவரையில் ஒத்துக்கொண்டதெல்லாம் வாஸ்தவமாயின் இந்தப் பெருநாள் தினமும் இந்த ஹஜ்ஜுமாதமும் இந்தமக்கமாநகரும் பரிசுத்தமுடையனவாயிருப்பதேபோல் உங்களுள் ஒருவருக்கொருவருள்ள இரத்தமும் பொருளும் கண்ணியமும் பரிசுத்தமாயிருத்தல் வேண்டும்; அதிஜாக்ரதையாக இருந்து கொள்ளுங்கள்! எனக்குப் பின்னால் நீங்கள் ஒருவரோடொருவர் கழுத்தை வெட்டிக்கொள்ளும் படியான விதத்தில் மீள் கேட்டில் சென்று விடாதீர்கள்; நீங்கள் நாளைத் தீர்ப்பு நாளில் உங்களுடைய நாயனைச் சந்திக்கும்படி நேரிடும்;

அப்பொழுது அவன் உங்களுடைய காரியங்களை யெல்லாம் கணக்குக் கேட்பான்.

மேலும் சிலவகையான புத்திமதிகளை யெல்லாம் அவர்களுக்குக் கூறிவிட்டு மீண்டும் நம் நபிகள் நாயகமவர்கள் அந்த முஸ்லிம் தோழர்களுக்குப் பின்வருமாறு உபதேசிக்கலாயினர்: "உங்களுடைய பட்டணமாகிய இந்த மக்கமாநகரில் ஷைத்தான் தன்னுடைய விக்கிரஹ ஆராதனையை நிலை நிறுத்த முடியாதெனக் கண்டு நிச்சயமாகவே மனவேதனையுடன் அலைகிறான். ஆதலின் மிக மிகச் சிறு சிறு காரியங்களிலும் நீங்கள் ஜாக்ரதையா யிருத்தல் வேண்டும்; உங்களுடைய காரியங்களில் சிறிது தவறுதல் ஏற்பட்டாலும் அது ஷைத்தானுக்கு அதிகம் திருப்தியை விளைவிக்கும். உங்களுடைய ஒரே நாயனையே நீங்கள் வணங்குங்கள்; தினம் ஐந்துவேளையும் அவனையே தொழுங்கள்; வருஷ மொருமுறை ரமலானில் நோன்பு வையுங்கள்; நான் சொன்ன படியே கேட்டு நடந்து உங்கள் நாயனுடைய சுவர்க்கத்தில் நுழையுங்கள்.

இப்படியெல்லாம் இஸ்லாமிய சகோதரத்துவத்துக்கு வேண்டிய அஸ்திவாரத்தை யெல்லாம் அதி அழுத்தமாகப் போட்டுவிட்டு, அவர்களுக்குள் சண்டை சச்சரவுகளொன்றும் விளையாத வண்ணமாய்த் தக்க ஏற்பாடுசெய்து வைத்து, ஏகதெய்வக் கொள்கைக்கு வேண்டிய இணையில்லா இனிய நெறிகளையும் இறுதிவரையில் ஸ்திரப்படுத்தி விட்டு நம்ரஸூல் நாயகமவர்கள் தங்களுடைய ஒட்டகத்தின் மீதிருந்தபடியே இறுதியில் பின்வருமாறு அங்கே குழுமியிருந்த முஸ்லிம்களை நோக்கிக் கேட்கத் தொடங்கினார்கள்: "ஆண்டவனால் எனக்கிடப்பட்ட ஊழியத்தை யான் நன்கு நிறைவேற்றினேனா?

"ஆம்! மிகநன்றாக நிறைவேற்றினீர்கள்," என்று எல்லோரும் ஒரேதொனியாக மறுமொழி கூறினார்கள்.

அப்பொழுது நம் ரஸூல் நாயகமவர்கள் தங்களுடைய கையை உயரக்கிளப்பி, "ஏ, ஆண்டவனே! இதற்கு நீயே சாக்ஷி," என்று சொல்லி மீண்டும் அம்மனிதரை நோக்கி, "இங்கே ஆஜராயிருப்பவர்கள் இச்சுபசெய்தியையெல்லாம் ஆஜரில் இல்லாதவர்களுக்குக் கொண்டு செல்வார்களாக," என்று வேண்டிக் கொண்டார்கள்.

இவ்வாறு நபிகள் நாயகமவர்களின் காரியமானது சம்பூரணமடைந்து முழுவெற்றியையும் பெற்றுக்கொண்ட பின்னர் அவர்கள் தங்களுடைய இறுதிக்காலத்தில் அதிகமான சாந்தியுடனும் சமாதானத்துடனும் வாழ்ந்துவந்தார்கள்; அப்பொழுதெல்லாம் அவர்களுக்கு வயது 62-க்கு மேல் ஆய்விட்ட படியால் சரீரமானது சிறிது தளர்வுற்றிருந்தபோதிலும் தங்களுடைய மரணத்துக்கு மூன்றுதினம் முன்வரையில் பொது ஜனங்களுடைய தொழுகையில் கலந்துகொண்டிருந்தார்கள். கதீஜாபீபி (ரலி) அவர்களுடைய மரணத்துக்குப்பின் ஹஸ்ரத் அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்களுடைய குமாரியாகிய பீபிஆயிஷா (ரலி) அவர்களை நபிகள் நாயகமவர்கள் மணமுடித்துக்கொண் டிருந்தார்கள். இவர்களுடைய விடுதியானது மதீனாவின் பள்ளிக்குப் பக்கத்தில் கட்டப்பட்டிருந்தது. அங்கேதான் ரஸூல் நாயகமவர்கள் தங்களுடைய இறுதிநாட்களில் தங்கியிருந்தார்கள். தங்களுடைய தேகத்தில் தாருட்யமிருந்த வரையில் மஸ்ஜிதுக்குள் வந்து எல்லோருடனும் தொழுகையில் கலந்துகொண்டே யிருந்தார்கள்.

இறுதியில் ஒருநாள் அலீ (ரலி) அவர்கள் மீதும் அப்பாஸுடைய குமாரரான பஸ்ல் (ரலி) அவர்கள் மீதும்

சாய்ந்து கொண்டு நபியுல்லா அவர்கள் மஸ்ஜிதுக்கு வந்து தொழுகையை முடித்து ெொ ு துஆ ஓதியபின்னர், "ஏ முஸ்லிம் சகோதரர்காள். உ களுள் யாருக்கேனும் யா ன் யாதேனுமொரு தீமையை இழைத்திருப்பேனுயின் அத ற்கு ஈடுசெய்யும்பொருட்டு யான் இ கே ஆயத்தமாயிருக் கிறேன்; யாருக்கேனும் நான் ஏதேனுமொன்று கொடுக்க வே டுமாயின் என்னிடத்திலிருக்கக் கூடியதையெல்லாம் அவருக்கே சொந்தமா கி விடுகிறேன் என்று மொழிந் ார்கள்' அதைக்கேட்டவுடன் அ கிருந்த அனைவரும் மனங்கரைந்து க ணீர்விட்டார்கள் அதன்பின் ரஸூல் நாயகமவர்கள் அங்கிருந்தவர்களுக்காகவும் அதற்குமுன் அல்லாஹ்வின்பாதையில் உண்மைக்கா உயிர்துறந்தவர் களுக்காகவும் ஆண்டவனிடத்தில் மன்றுடிக்குறையிரந்தார் ள். மேலும் அ கிருந்தவர்களுக் கெல்லாம் நல்லுபதேசம் புரிந்து முஸலிம் ளனைவரும் இஸ்லாத்தின்படி யொழுகி ஏகதெய்வக் கொள்கையையும் ஏகசகோதரத்துவத் தன் மையையும் கடைப்பிடிக்க வேண்டுமென்றும் கூறியபின் னர், 'இவ்வுலகத்தி ) தங்களை வீ பெருமையால் செரு குச்செய்து கொள்ளாத ர் ளுக்கும், மற்றையோருக்குத் தீங்குசெய்யாத ர் ளுக்கும் அவ்வுல ாழ்க்கையின் ஆனந்தத்தைக் கொடுப்போம்; ஏனெனின், பயப தியுடன் நடந்து கொள்பவரு ே ன்மையான முடிவு கிடைக் கூடும்,' என்னும் குர்ஆன் ஆயத்தை ஓதித் த களுை ய உபதேசத்தை முடித்து ொ ா ர் ள்.

அதன்பிறகு நபிபெருமானின் தேகவன்மையானது அதிசீக்கிரம் கு றத்தலைப்பட்டது. இறுதியில் ஹிஜ்ரி 11 ம் ஆ டில் ரபீயுல்அவ் ல் மாதம் பிறை 12 ஆகிய தி கட்கிழமையன்று மத்தியான வே ளையில் ஆ ட ளை

நூற்த்து மிருதுவாகப் பிரார்த்தனை புரிந்துகொண்டே யிருக்கும்போது அவர்களுடைய ஆவியானது ஆண்டவன் வயம் சந்தோஷமாகச் சென்று சேர்ந்துவிட்டது. "நிச்சய மாகவே நாம் அல்லாஹுத் தஆலாவுடைய அடிமைகளா யிருக்கிறோம்; ஆதலின் அவனிடத்திலேயே நாம் நிச்சய மாகச் சென்று சேர்வோம்"- (குர்ஆன், 2:156).

இஸ்லாமிய குடியாசானது அரபுநாட்டில் ஏற்பட்ட பின்னர் நபிகள் நாயகமவர்கள் பத்துவருஷகாலம் வரை யில் அதன் தலைமைஸ்தானத்தை வகித்துவந்தார்கள். அவ் வளவுகுறுகிய காலத்துக்குள் அரபுதேசத்தாரின் குணநி சயமானது முற்றிலும் மாறிச்சீர்திருத்தமடைந்துவிட்டது. அத்தேசத்திலுள்ள ஒவ்வொரு மாகாணத்துக்கும் பிரதி நிதிகள் அனுப்பப்பட்டதனல் அவர்கள் சென்று ஆங்காங் கிருந்த உள்நாட்டுக் கலகங்களையெல்லாம் ஒழித்துவிட்டார் கள்; இதனால் அவர்களுக்குள்ளிருந்த பழிவாங்கும் குண மானது பறந்துவிட்டது. தேசமுழுதும் சாந்தியும் சமா தானமும் குடிகொண்டு விட்டதனல் உள்நாட்டு வெளி நாட்டு வர்த்தகமெல்லாம் தழைத்தோங்கத் தலைப்பட்டன. அந்நாடுமுழுதும் மாதர்நீதியானது மிகுதம் கொண்டா டப்பட்டுவந்தது. அவர்களுடைய குணமும் நடையுடை நாகரிகமும் சீர்திருத்த மடைந்துவிட்டன. ஆடுமாடுகளைப் போல் திரிந்தவர் ளெல்லாம் அமைதியுடன் வீட்டில் வாழத்தொடங்கினர். வியபசாரமும் மதுபானமும் வேரோ டறுக்கப்பட்டன. கொலையும் களவும் அடியோடொழிந்தன. அக்காலமுதல் அயல்வீட்டு ஆண்களும் பெண்களும் ஒருவ ரோடொருவர் பொதுவா மிசிரமாகக்கூடிய துர்க்குண மானது முற்றிலும் தடைப்படுத்தப்பட்டது.



## அத்தியாயம 4.



### அபூபக்கர் ஸித்தீ் (ரலி)



நபீகரீம் (ஸல்) அவர்கள்மீது அந்த அரபி ள் வைத்திருந்த அத்தியந்த விசுவாசத்தினுல் அவர்கள் கால தியால் தே வியோ மாய் விட்டார்க ளென்பதை ஒருவரும் முத லில் நம்பத்துணியவில்லே. அரபி ள் த் களுடைய மாதா பிதாவின்பால் வைத்திருந்த அபிமானத்தைக் காட்டினும் ஆயிரமா பிரம் பங்கு அதி மான அன்பையும் அபிமானத் தையும் த் ளுடைய நாய த்தினிடம் ரட்டிவந்தார்கள். அல்லாஹ்வுக்கு அடுத்தபடியில் ரஸுல் நாயகமவர்களேயே விசு சித்து வந்தார்கள். சுமார் ரல்நூற்றுண்டின் கால அளவு் குள் இவ்வுல முழுதையுமே ஆணிவேருடன் அசையும்படி செய்த அப்படிப்பட்ட பராக்ரமசாலியாகிய அதிமேதாவி யென்னப்படும் ஒரு சிறந்த நபியானவர் மற் றைச் சாதார ம கௗப்போல் எவ்வாறு இறந்துபடுதல் முடியுமென்று ஆச்சரியப்பட்டார் ள். நம்முடைய நபிகள் நாய மவர்கள் ஆயிரத்து முந்நூறு ரு் களுக்கு முன் அ தரித்திராமல் அதற்கு முற்பட்ட பண்டைக்காலப் பௌராணி நாட் ளில் தோ ் றி யிருப்பார்களாயின், அல்லது மற்றமதாசாரியர் ளைப் போல் நம் ரஸுல் நாய ம ர் ளும் பகுத்தறிவின் பயனைத் த் ளுடைய உபதே சத்தில் அதி மாயுபயோகி ் ரமல் பாமரத்த ் மை யுள்ள ப ் டை ் ரலப் பழயமெ ளட்டைகத்தையே மிருதம் எடுத்

தாண்டிருப்பார்களாயின் அவர்களை யெல்லாம் ஆக்கியனைப்போலவே இவர்களையும் ஒரு தெய்வமென்றோ, அல்லது தேவ அவதாரமென்றோ செய்திருப்பார்கள். ஆனால் இதற்குமாறாக, "நானும் உங்களைப்போன்ற ஒருமனிதன் தான்" என்னும் குர்ஆனின் திருவாக்கியத்தை நபியுல்லா அவர்கள் அடிக்கடி கூறிவருவார்கள். ஆயினும் அவர்கள் மரணமடைந்த வேளையில் அரபிகள் அதை ஒத்துக்கொள்ள வில்லை; அவர்களுடைய ஆவியானது சிறிது சொகமுட்டுக் தான் அடைந்திருத்தல் கூடுமென்று பலர் வாதம்பண்ணினர். அவ்வேளையில் அபூபக்கர்ஸித்திக் (ரலி) அவர்கள் தங்களுடைய நாயகமவர்கள் மூர்ச்சையடைந்தில்லை யென்றும், உண்மையிலேயே அவர்களுடைய ஆவியானது ஆண்டவன்பால் சென்றுவிட்டதென்றும் செவ்வனே சந்தேகமறத் தெரிந்துகொண்டு அங்குக் குழுமியிருந்தவர்களை நோக்கிப் பின்வருமாறு கூறத்தொடங்கினார்கள்: "ஓ முஸ்லிம்களே! நீங்கள் வணங்கிவந்தது முஹம்மதைக்குறித்தே யிருக்குமாயின் அந்தமுஹம்மது (ஸல்) இறந்துபோய்விட்டாரென்று தெரிந்து கொள்ளுங்கள்; இன்றேல் நீங்கள் வணங்கிவருவது அல்லாஹ்த் தஆலாவைக்குறித்தே யிருக்குமாயின் அந்த ஆண்டவன் மட்டும் இறக்கவே யில்லை; அவன்பிழைத்தே யிருக்கிறான் என்று தெரிந்து கொள்ளுங்கள். மேலும் குர்ஆன்ஷரீபிலுள்ள இந்தவாக்கியங்களையும் நீங்கள் ஒருபோதும் மறக்கவேண்டாம்: 'முஹம்மது (ஸல்) ஒரு ரஸூலைக் காட்டிலும் வேறொன்று மில்லை; இவருக்கு முன்னிருந்த ரஸூல்மார்களெல்லாம் காலஞ்சென்று போனதேபோல் இவரும் காலஞ்சென்று போய்விடுவார்.' இன்னும் 'ஓ முஹம்மதே! உமக்குமுன்னே வந்தபலரும் மரணமடைந்தது போலவே நீரும் மா

மடையவேண்டும்.' இவ்வாறு அபூபக்ர் ஸித்தீக் (ரலி) அவர்கள் உறுத்திக்கூறிய பின்னர் அங்கிருந்த ஆரபுக ளெல்லோரும் அதை மெய்யெனக்கண்டு நபிகள் நாயகம் இறந்துபோனதைக் குறித்து மிகுதியாகக் கிலேசமுற்று அதி மாகப் பரபரப்புக்கொண்டனர்கள். அவர்களுடைய நிலைமையானது அப்பொழுது தாயற்ற சேயைப்போலும் நீரற்ற மீனைப்போலும் இருந்துவந்தது.

வ்வுத்தருணத்தில் கிலேச மடைந்திருக்கும் முஸ்லிம்களுக்கொரு தைரியத்தை யளிக்கவும் புதிதாய் ஏற்பட்டிருக்கும் இஸ்லாமிய குடியரசானது குலைந்து போகாமலிருக்கவும் ஒரு தலைவர் வேண்டியது அவசியமாகக் காணப்பட்டது. நபிபெருமானால் நிர்மாணிக்கப்பட்ட ராஜ்யமானது குடியரசுக் கொள்கையையே முழுவதும் தனக்கு அடிப்படையாகக் கொண்டிருந்ததனால் ரஸூல் நாயகமவர்கள் ஒருவரையும் தங்களுக்குப்பின் பிரதிநிதியாக (கலீபாவாக) நியமித்துவிட்டுச் செல்லவில்லை; அவ்வேலையைத் தங்களுடைய தோழர்களே தங்களுக்குப் பிறகு செய்துகொள்ளட்டுமென்று விட்டுச் சென்று விட்டார்கள். ஆனால் தங்களுக்குப் பின்னே தங்களுடைய ஸ்தானத்தில் பிரதிநிதியாக இருக்கக்கூடிய யோக்கியதையை யுடையவர் அபூபக்ர் ஸித்தீக் (ரலி) என்பதை மட்டும் பல மாற்றானும் தங்களுடைய ஜீவதசையில் குறிப்பிட்டுக் காட்டி யிருந்தார்கள். இந்த அபூபக்கரானவர் (ரலி) அப்பொழுது அடைந்திருந்த வயதின் முதிர்ச்சியையும் அவருக்கு மக்காவிலும் மதீனாவிலும் இருந்த மரியாதை மிக்க செல்வாக்கையும் நோக்கி அவர்பக்கமே முஸ்லிம்களின் நோட்டமானது திரும்பிற்று. இவர் வயதில் பெரியவர்; புத்தியில் மேதாவி; மிகப்பொறுமையுடன் எதையும் நிதானித்துப் பார்க்

கூடிய மிதபுத்தியுடையவர். ஆதிமுதல் நபிகள் பிரானுடன் ஒன்றியிருந்தவர்; அவர்களுடைய அரசுநிலை யொழுகின் அந்தரங்கத்தை யெல்லாம் முழுதும் நன்கறிந்தவர். இப்படிப்பட்ட பெருமைகளை யெல்லா முடைய அந்த அபூபக்கர் ஸித்திக் (ரலி) அவர்களை அப்பொழுது கலீபாவின் ஸ்தானத்துக்கு அருகரா யிருந்ததனால் அவர்களையே எல்லோரும் அலீயார் (ரலி) உட்பட அனைவரும் ஏகோபித்துப் பகிரங்கமாக, கலீபாவாக நியமித்துக் கொண்டார்கள். இந்தவிதமான நியமனத்தை நபிபெருமானின் குடும்பத்தினர் அனைவருங்கூட முழுமனத்துடன் அங்கீகரித்துக் கொண்டார்கள்.

அபூபக்கர் ஸித்திக் (ரலி) அவர்களுடைய கிலாபத்தை அனைவரும் ஒத்துக் கொண்டு விட்டதாக உறுதி மொழி கூறியபின்னர் அந்த கலீபாவானவர், "ஓ மகா ஜனங்களே! இந்தக்குடியரசின் ராஜ்யாதிகாரப் பொறுப்பை இப்பொழுது அடியேனுடைய தோளின் மீது சுமத்திவிட்டீர்கள். உங்களுக்குள் நான்தான் மகாசிலாக்கியமானவனென்று என்னால் சொல்வது முடியாது; எனக்கு உங்களெல்லோருடைய ஆலோசனையும் உதவியும் அடிக்கடி வேண்டியிருக்கும். யான் ஏதேனும் நன்மையான காரியத்தைச் செய்வேனாயின் என்னை ஆதரியுங்கள்; தீயகாரியம் செய்துவிடுவேனாயின் எனக்குப் புத்திகூறித் திருத்துங்கள். ராஜ்யாதிகாரத்தை வகித்திருக்கும் மனிதரிடத்தில் உண்மையை உரைப்பதே அவர்பால் காட்டும் நன்றியாகும்; அவரிடத்தில் உண்மையை யொளிப்பதுதான் ராஜதுரோகமாகும். என்னுடைய தோற்றத்தில் பலசாலிகளும் பலஹீனமுள்ளவர்களும் ஒரே சமமாகத்தான் காணப்படுகின்றனர்; ஆதலின் அவ்விருவருக்கும் சமமாக நியாயமே

பூ.' ப்பட டே 'டுமென்று விருப்பப்படுகிறே'. அல்லாஹ்வு'கும் அவனுடைய ரஸூலு'க்கும் யான் கீழ்ப்படி தே போல் நீ' ளும் என'குக் கீழ்ப்படிதல் வே'டும்; ஆனல் அல்லாஹ்வு'கும் ரஸூலுக்கும் யான் கீழ்ப்படியாமற் போய்விடுவே ளுயின் பிறகு யாரும் எனக்கு' கீழ்ப்படிந்து நடக் கே 'டுமெ'று எ' ளுவதற்கு என' ொன்றும் பாத்தியமில்லை, என்று பிரச'கம் புரிந்து விட்டுத் த'களுடைய ராஜ்யாதி ரத்தை ஆரம்பம் செய்தார்கள்.

ஆயினும் த' ளை யெல்லாம் லௌகி வைதிக சம்மந்தமான சமூக' கட்டுப்பாட்டின் கீழ் அடக்கி வைத்திருந்த நபிகள் நாயகமவர் ள் காலஞ்சென்றுவிட்டார்களென்னும் செய்தியைக்கே ட்ட உள் நாட்ட ரபிகள் பலர் அவிழ்த்து விடப்பட்ட ரட்டு மிரு 'களைப்போல் எதேச்சையாய்க் ளர்ச்சி செய்யத் தலைப்பட்டனர் ஏ காலத்தில் எல்லோரும் கி ர்ச்சி செய்வார்களாயின் அவர்களை வரையும் எவ் றறு அட'கியாளுதல் முடியுமென்னும் ஏக்கத்திஞல் மதீனுவிலிருந்த முஸ்லிம் ள் மனக்கிலேச முற்றுச் சற்று அஞ்ஞர்கள். நபி ள் நாய மவர்களுடைய ாலத்தில் அ ர் ளு'கு எதிரிடையாய்' கிளம்பிய முஸைலிமா முதலிய பொய்யர்கள் ஒருப' ம் முஸ்லிம்களைத் துன்புறுத்தத்தலைப்பட்டனர்' மற்ருருப' ம் நபிபெருமானுடைய அந்திய தசையில் இ லாத்தைத் தழுவிய நௌ முஸலிம்கள் மீ'டும் ாபிராய்ப்போய்விடுவார் ளோ ெ ன்று அஞ்சும்படியான அ சாமும் நேரிட்டு விட்ட . ரஸூல் நாயகமவர் ளுடைய ாலத்து'குப் பி' சிறிது பொழுதை'குள் மதீனுவிலுள்ள மனிதர் ளைத் தவிர்த்து மற்றையோ ரெல் ாம் முஸ்லிம் ள்தாமோ வென்று சந்தேகி'கும்படியான

பிரமயம் நேரிட்டு விட்டதனால் மதீனாவென்னும் அவ்வொரே நகரம் மட்டுமே மீண்டும் எல்லா எதிரிகளுடனும் மல்லாடும் படியான அவசியம் பிறந்து விட்டது.

தீனுல் இஸ்லாமானது, மகா அழுத்தமான சன்மார்க்க நெறிகளையெல்லாம் மனிதர்கள் கடைப்பிடிக்க வேண்டுமென்று மிக உறுதியாக உபதேசித்து வந்ததனாலும், அந்த முஸ்லிம்களனைவரும் தங்களுடைய ஜக்காத் தென்னும் ஏழைவரியை பைத்துல்மால் என்னும் பொதுகஜானாவில் கட்ட மறுத்ததனாலும் இஸ்லாமிய குடியரசுக்குள் பற்பல விதமான ராஜதுரோகத்துக்குரிய கிளர்ச்சிகள் ஆங்காங்கே முளைக்கத்தலைப்பட்டன. நாலுபக்கத்திலும் எதிரிகளால் சூழப்பெற்றிருந்தும் மதீனாவிலுள்ள முஸ்லிம்கள் மட்டும் தங்களுடைய மனோதைரியத்தை யிழந்துவிட வில்லை; இஸ்லாத்தின் மீது அவர்களுக்கிருந்த உண்மையும் உறுதியும் உற்சாகமுமே மீண்டும் அன்னார்க்கு அளவு கடந்த வெற்றியைக் கொண்டு வந்தன. கலீபாசாரானவர் நபிகள் நாயகமவர்களுடைய சரமக்கிரியைகளை யெல்லாம் 'சரிவர முடித்துக்கொண்டபின்னர் தங்களுடைய குடியரசு ராஜ்யத்தை ஒழுங்கான முறையில் பலப்படுத்திக்கொண்டு எதிரிகளின் தாக்குதல் களுக்கு வேண்டிய பாதுகாப்புக்குரிய பந்தோபஸ்தனைத்தையும் அதிதுரிதமாக அமைக்கத் தொடங்கினார்கள். நபிகள் நாயகமவர்கள் தங்களுடைய தேகவியோகத்துக்குச் சற்று முன் ஷாம்தேசத்தில் திமிஷ்கு நகருக் குருகிலிருந்த கிறிஸ்தவச் சிற்றரசனிடம் ஒருபடையை அனுப்பி, அங்கு தன்பாலனுப்பப்பட்ட முஸ்லிம் தூதரை ஏன் அக்கிரமமாய்க் கொலை செய்து விட்டானென்று சமாதானம் கேட்டு அதற்கு வேண்டிய பரிகாரத்தைப் பெற்றுக் கொண்டு வரும்படி கட்டளையிட் டிருந்தார்கள். அபூபக்கர்

ஸித்தீக் (ரலி) அவர்கள் மதீனாவுக்குள்ளேயே தற்காப்புக்காகப் படைகளைச் சேமித்துவைக்க வேண்டுமென்னும் அத்தியாவசியத்தை அதிகமாக அறிந்திருந்தும், நபிகள் நாயகமவர்களுடைய இறுதிவிருப்பத்தை வீண் செய்யக் கூடாதென்னும் நல்லெண்ணத்துடன் அந்த ஷாம்தேசத்துக்குச் சென்ற படையெடுப்பை மிகுதம் ஆதரிக்கத் தொடங்கினார்கள். மேலும் முஸ்லிம் ராஜ்யத்தின் வடக்கெல்லைப் பிராந்தியத்திலுள்ள மனிதர்களால் அடிக்கடி தொந்தரைகள் ஏற்பட்டு வந்ததனாலும் அத்திசையை நோக்கிப் படைகளை அனுப்ப வேண்டிய அவசியம் அதிகமாகக் காணப்பட்டது. இந்த எல்லைப்புறப் படையெடுப்புக்காக முஸ்லிம்கள் புறப்படத் தயாராயிருந்த போது அவர்களுக்கு அபூபக்கர் ஸித்தீக் (ரலி) அவர்கள் பின் வருமாறு உபதேச மொழிகள் கூறினார்கள்: "இதோ, பாருங்கள். நீங்கள் ஒருபோதும் சதிமோசம் செய்யாதீர்கள்; உண்மையை விட்டு ஓரணுவும் அப்பாற்சென்று விடாதீர்கள். எவரையும் சித்திரவதை புரியாதீர்கள். இன்னும் வயோதிகர்களையும் ஸ்திரீகளையும் குழந்தைகளையும் கொலை செய்யாதீர்கள். பேரீச்சமரங்களை வெட்டாதீர்கள்; மேலும் அவைகளைத் தீயிட்டுக் கொளுத்தாதீர்கள். இன்னும் மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் ஆகாரமளிக்கக் கூடிய எவ்வகைப்பட்ட பழமரங்களையும் பாழாக்கி விடாதீர்கள். ஆகாரத்துக்கு அத்தியாவசியமாயிருந்தாலொழிய ஆடுமாடுகளையும் ஒட்டகங்களையும் கொலைசெய்யாதீர்கள். அத்தேசங்களிலுள்ள மனிதர்கள் தங்களுடைய பாத்திரங்களில் கொண்டுவரும் மாம்சங்களின்மீது ஆண்டவனது பெயரை உச்சரித்துவிட்டு அதை நீங்கள் புசிக்கலாம். முண்டனம் செய்து கொண்டிருக்கும் பாதிரிமார்கள் பணிந்து வரும் பக்ஷத்

தில் அவர்களைத் துன்பம் செய்யாமல் மன்னித்து விடுங்கள். இப்பொழுது ஆண்டவனது திருநாமத்தைக் கொண்டு படையெடுத்துச் செல்லுங்கள்; எதிரிகளின் ஆயுதத்தினின்றும் கொள்ளை நோயினின்றும் ஆண்டவன் உங்களைக் காத்துரக்ஷிப்பானாக. இவ்வாறு ஆசிகூறி, கலீபாசர் ஸைதின் குமாரரான உஸாமா (ரலி) என்பவரின் தலைமையின் கீழ் அந்தப் படையெடுப்பை அனுப்பிவைத்தார்.

ஷாம்தேசத்தை நோக்கி வடக்கேசென்ற உஸாமா என்பவர் தம்முடைய காரியத்தில் கரைகடந்த வெற்றியடைந்து வரும்போது மதீனாவைச் சூழ்ந்துள்ள மனிதர்கள் கலகம்செய்து அந்தராஜதானி நகரத்தைத் தாக்கத் தொடங்கினார்கள். இவர்களையெல்லாம் கலீபாசர் ஒருவாறு எதிர்த்துநின்று தடை செய்யும்போது ஷாம் தேசத்திலிருந்து உஸாமாவும் வெற்றிமாலை சூடித் திரும்பினார். உடனே கலீபாவானவர் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களுடைய தலைமையின் கீழ்ச்சில படைகளை அனுப்பி அந்த எதிரிகளாகிய கலகக்காரர்களையெல்லாம் அடக்கும்படி செய்தியனுப்பினார். இந்த காலித் என்பவர் மிகுதமான தைரியம் நிறைந்த மகா சுத்தவீரர்; இவரைக் கண்டவுடன் எதிரிகளெல்லாம் எமனைக்கண்டது போலவே நடு நடுங்குவர்; இதனால் பலகூட்டத்தார்கள் இவருடன் எதிர்த்துச் சண்டைசெய்யாமலே மரியாதையுடன் தலைவணங்கி விட்டார்கள். ஆயினும் மற்றுஞ்சில கலகக் காரர்கள் முஸலிம்களுக்கு அஞ்சாமல் அவர்களுடன் எதிர்த்து நின்று யுத்தம் புரிந்தார்கள்; அவர்களுடன் நிகழ்ந்த யுத்தங்களில் இருதிறத்தாரும் அதிகமான கஷ்டநஷ்டங்களையெல்லாம் மிகுதமாய் அடைந்தார்கள். நபிகள் நாயகமவர்களுடைய காலத்தில் அவர்களுடன் போட்டியாய்க் கிளம்

பின முஸைலிமா என்னும் பொய்யனுடனும் ஒரு யுத்தம் நிகழ்ந்தது; அப்பொழுது எமாமா என்னுமிடத்தில் நடந்த சண்டையில் அந்த முஸைலிமாவும் கொல்லப்பட்டு அவனைப் பின்பற்றியிருந்த பனூ ஹனீபா என்னும் கூட் டத்தார்களும் முதுகொடியும் படியாக முற்றிலும் முறி யடிக்கப் பட்டார்கள். இந்த முஸைலிமா என்பவன் இறந்து பட்டவுடன் அரபுநாட்டிலிருந்த மற்றை எதிரிக ளெல்லாம் கொஞ்சங்கொஞ்சமாகத் தலைவணங்கி இஸ்லா மார்க்கத்தில் சேர்ந்து கொண்டார்கள்.

இவ்வாறு அரபுதேசத்தின் வடகிழக்குப் பிராந்தியங் களிலிருந்த கலகக்காரர்களை யெல்லாம் அடக்கி அங்கங்கே யும் சமாதானத்தையும் நிலைக்கச்செய்து கொண்டுவரும் போது முஸ்லிம்களுக்கும் அங்கிருந்த ஹீரா என்னும் ராஜ்யத்துக்குக் கட்டுப் பட்டிருந்த வனவாசிகளான காட்டு மிராண்டிக் கூட்டத்தார்களுக்கும் இடையில் மனஸ்தா பம் ஏற்பட்டு விட்டது. இந்த ஹீரா என்னும் ராஜ்யமா னது பாரஸகதேசத்தின் ஏகாதிபத்தியத்துக்குக் கட்டுப் பட்டிருந்தது அக்காலத்தில் அந்த ராஜ்யத்துக் குட்பட்டி ருந்த ஹஜர் என்னும் பகுதியிலிருந்து இந்தஹஜர் என் பது அரபுநாட்டின் வடகிழக்கு எல்லையில் ஷால்டியாவின் ஓரமாயிருந்தது, மேற்கில் யூப்ரடீஸ் நதியின் கிளைநதி வரை யில் ஒரு பாலைவனப் பிரதேசமானது இருந்து வந்தது இது நதியின் தொடர்ச்சியா யிருந்து ட்டில் ஹௌரான் என்னும் மேட்டு நிலங்களாலும் தாத்மூர் என் னும் நகரத்தாலும் சூழப்பட்டிருந்தது. அத்தேசத்தில் பாமரத்தன்மையுள்ள பழங்குடிகள் பலர் வாழ்ந்து வந் தார்கள்; அவர்கள் பெரும்பாலும் கிறிஸ்துமதத்தைப் பின் பற்றிவந்தார்கள்; இவர்கள்தாம் பாரஸீக ராஜ்யத்தின்

கீழ்ப் பணிந்து கிடந்தார்களென்றாலோ, இவர்களுடைய இனத்தவராயிருந்த ஸிரியா வாசிகளுள் சிலர் ரூம்தேசத்தின் ஆட்சியின் கீழ் அடக்கிக்கிடந்தார்கள். இவர்களுள் முக்கியமான வர்க்கத்தின் பெயர் கஸ்ஸான் என்பதாகும். ஆனால் அவர்களுக்குக் கிழக்கேயிருந்த பனூதகுலிப் என்னும் கூட்டத்தார்கள் பாரஸீக ராஜ்யத்தின் கீழேயே அவர்களால் ஆளப்பட்ட ஜாதியாரா யிருந்துவந்தார்கள். இவர்களெல்லோரும் ஒருவரோடொருவர் பந்துமித்திரர்களாகவே காலங்கழித்து வந்தார்கள். இக்கூட்டத்தார்களுக்கும் அவர்களைச் சமீபித்துள்ள அரபிகளுக்கும் இடையிலுங்கூட அதிகமான நட்புரிமையானது காணப்பட்டு வந்தது.

ஆனால் புராத்துநதி தீரத்திலுள்ள வளம் பொருந்திய நாடுகளெல்லாம் ஆதிமுதல் அரபிகளாலேயே குடியேறப்பட்டு வந்தன; இவர்கள் "பத்து"களைப்போல் நாடோடியாயில்லாமல் நகரங்களில் வசித்து வந்தார்கள். கிருஷித்தொழிலே இவர்களுக்கு முக்கிய வேலையா யிருந்துவந்தது. முஸ்லிம்கள் அரபு நாட்டின் வடகீழ் மாகாணத்திலுள்ள கிளர்ச்சிக்காரர்களை யெல்லாம் அடக்கிக்கொண்டு வரும்போது அவர்களுடன் நட்பாயிருந்த அந்தப் பாரஸீ ராஜ்யத்தின் பாமரக்குடிகளும் கிலாபத் ராஜ்யத்துக்கு விரோதமாய்க் கலகம் பண்ணிக்கொண் டிருந்தார்கள். இஃதல்லாமல் புராத்து(யூப்ரத்தீஸ்)நதிக்கும் தஜ்லா(டைக்ரிஸ்) நதிக்கும் இடையிலுள்ள வளம் பொருந்திய பூசாரமும் பலதேசத்து மன்னர்களுடைய பார்வையையும் இழுத்துக் கொண்டிருந்தது. சமுத்திரத்தில் வீழ் தற்குச் சில நூறுமைல்கள் வடமேற்கிலேயே புராத்து நதியும் தஜ்லா நதியும் ஷத்துல்அரப் என்னும் பெயரைப் பெற்றுவிடுகின்ற

றன. இந்த இரண்டு நதிகளும் ஒன்று சேர்வதற்குமுன் வடமேற்குத் திசையில் அவ்விரண்டு நதிகளுக்கு மிடையி லிருந்த பாகத்துக்குத்தான் புராதன காலத்தில் மெஸ பொட்டேமியா என்று பெயர் வழங்கி வந்தது. இதன் தென்கிழக்கிலுள்ள பகுதிக்குத்தான் அக்காலத்திய அரபி கள் இராக் அரப் என்று நாமம் சூட்டியிருந்தார்கள். இந்த இராக் அரபில்தான் பண்டைக்காலத்திய ராஜ்யங்களாகிய பாபிலோனியாவும் (பாபில்), ஷால்டியாவும் (ஸவாத்) இருந்து வந்தன. புராத்து தஜ்லா ஆகிய இவ்விரு நதி யோரங்களில்தாம் மகா கீர்த்திவாய்ந்த பல பட்டணங்கள் கட்டப்பட்டிருந்தன. அஸ்ஸீரிய அரசர்களாயிருந்த அந் தப் பலசாலிகளின் ராஜதானியாகிய நைனவே என்னும் ந ரமானது தஜ்லாநதி தீரத்தில்தான் கட்ட ப்பட்டிருந்தது. பாரஸீக தேசத்து மாகாணாதிபதிகள் வாழ்ந்து வருதற் ாக அமைக்கப்பட்டிருந்த மதாயின் என்னும் பட்டண மும் அந்நதிக்கரையின் மீதுதான் இயற்றப்பட்டிருந்தது. அதே நதிதீரத்தின் மீதுதான் மத்திய காலத்தில் வாழ்ந்து ந்த அப்பாஸ் வம்சத்தைச்சார்ந்த மன்ஸூர் முதலிய கலீபா சர்களால் நிர்மாணிக்கப்பட்ட பகுதா தென்னும் பட் டணமும் கட்ட ப்பட்டிருக்கிறது. ஆனால் புராத்து நதியின் மீது பழய பாபிலோன் பட்ட மும் அரபிகளால் நிர் மாணிக்கப்பட் . கூபாவும் ஹீராவும் இன்னும் பல நகர களும் கட்ட ப்பட்டிருந்தன. தஜ்லா நதிக்குக் கிழ கே யுள்ள பாரஸீக தேசத்தின் மத்திய பாகத்தைத்தான் அரபி கள் "இராக்அஜம் என்று அழைத்து ந்தார்கள்.

அபூ பக்கர் ஸித்தீக் அவர்களா லனுப்பப்பட்ட ாலித், முதன்னா (ரலி) என்னும் தளபதிகள் ஹ ர் என்னும் பகுதி க்குச் சென்று அங்குள்ள கல ாரர் ளையெல்லாம் அடக்

கிக்கொண்டிருக்கும்போது அக்கலகக்காரர்களுடன் ந பர்களாயிருந்த ஹீரா என்னும் பட்டணவாசிகளும் கிலா பத் ராஜ்யத்துக்கு விரோதமாகக் கலகம் பண்ணினார்கள். அப்பொழுது முஸ்லிம் தளபதிகள் ஷால்டியா மாகாணத் திலிருந்த பாரஸீக அதிகாரிக்குத் தெரிவித்து அக்கல கத்தை அடக்கும்படி சொன்னார்கள்; அந்த மாகாணாதிபதி தன் எல்லைக்குள் நிகழ்ந்த கலகத்தை அடக்காமல் முஸ்லிம் களைப் போருக்கழைத்தான்; அப்பொழுது நடந்த யுத்தத் தில் ஷால்டியர்களுக்குப் பெருத்த நஷ்டம் ஏற்பட்டு ஹீரா என்னும் பட்டணமும் சில தினங்களுக்குள் முஸ்லிம்களின் கைவசமாய் விட்டது. உடனே ஷால்டியாவிலிருந்த பெரும் பெரும் நிலச்சுவான்தார்களெல்லாரும் இஸ்லாத் தைத் தழுவி, கிலாபத் ராஜ்யத்தை ஏற்றுக்கொண்டார்கள். அவர்களுடைய நிலங்களை யெல்லாம் அவர்கள் வயமே ஒப்படைத்துவிட்டு அவற்றின்மீது முஸ்லிம்கள் ஒரு வரியை மட்டும் ஏற்படுத்திவிட்டார்கள். அத்தேசத்தி லிருந்த குடிகளானவர்களை யெல்லாம் முஸ்லிம்கள் ஒன்றும் செய்யாமல் பழய வழக்கம்போல் சுயேச்சையாய் விட்டு விட்டார்கள்.

ஷால்டியாவில் (ஸவாதில்) இப்படிப்பட்ட நஷ்டம் ஏற்பட்டு ஹீரா என்னும் பட்டணமும் முஸ்லிம்களால் பிடிபட்டுப் போனதைக் கண்டவுடன் பாரஸீகர்கள் மிகுத மான ஆத்திரத்தை அடைந்தார்கள். ஜாதி பேதத்தினு லும் வர்ண பேதத்தினாலும் மதபேதத்தினாலும் வேறுபட் டிருந்த அரபிகளைக் கண்டு பாரஸீக அரசாங்கத்தார் பெரி தும் வெறுக்கத் தொடங்கினார்கள். அக்காலத்தில் அந்தப் பாரஸீக தேசமானது அதிகமான ராஜ்யாதிகாரச் செருக் குள்ளதா யிருந்துவந்தது. இக்காலத்தில் பாரஸீக தேச

மென்று வழங்கப்பட்டுவரும் பூபா த்துட ன் இராக் அஜ மும் மெஸபொட்டேமியாவும் சேர்ந்திருந்த தோடு, அத் தேசமானது கிழக்கே மத்திய ஆசியாவிலுள்ள தார்த் தார் தேசம் வரையிலும் தென் கிழக்கில் ஹிந்துஸ்தானத் தின் எல்லைவரையிலும் பரவிக்கிடந்தது. அத்தேசத்துச் சக்ரவர்த்தி அரபிகளின் வெற்றியைப் பற்றி கேள்வி யுற்று அவர்களைத் தன்னுடைய மாகாணமாகிய ஷால்டி யாவை விட்டு அப்பால் துரத்தும்படி மிக் கடுமையான ஆணையொன் றிட்டான்.

அவ்வேளையில் கலீபாசர் காலித் இப்னு வலீதை ஷாம் தேசத்துக் கனுப்பும்படியான அவசரமொன்று ஏற்பட்டு விட்டது; ஆதலின் முதன்னா மட்டும் ஷால்டியாவிலிருந்து கொ டு பாரஸீக தேசத்தின் பெரும்படையைத் தனியே எதிர்க்கும்படியான நிர்ப்பந்தம் நேரிட்டு விட்டபடியால் அவர் அதிகமான யுத்த வீரர் ளைச் சேகரம் செய்துவரும் பொருட்டு மதீனாவு கு அதிவே மாகத் திரும்பி வந்தார். அ கே வந்தவுடன் வயது சென்ற கலீபாசர் மரணத் தறுவாயி லிருப்பதைக் கண்டார்.

பாரஸ் மன்னனுடன் நடந்து ந்த யுத்தமானது இவ் ாறிரு கும்போது அபூப ர் ஸத்தீ (ரலி) அவர் ள் லீபாவாக நியம ம் பெற்றவுடன் முஸலிம் ளு கும் ரும் தேச அரசா த்தினருக்கும் இடையிலு கூட மன வருத்த முண்டாய் யு தம் நிகழத் தொட கிற்று. அ ாலத்தில் மெஸபொட்டேமியாவுக்கும் ஷால்டியாவு கும் மேற்கிலிருந்த பகுதிகளனைத்தும் ரும் தேசத்தி ஆட் சிக் குட்பட்டிருந்த . ஆயினும் பலஸ்தீ மு ஷாம் தேச மும் இரா தேசம் போ ே அராபி குடி ளால் நிரப் பப்பட்டிருந்தன; ஷாம் தேசத்துக்குள்ளிருந்த ம ல்

வெளியாகிய தபூக் என்னும் பாலை வனத்திலும் அந்த அராபி வனவாசிகளை அலைந்து திரிந்து வந்தார்கள். இவர்களெல்லாம் ஜாதியாசார முறைமைப்படி இஸ்லாமிய குடியரசில் சேர்ந்திருத்தல் வேண்டும். உஸாமா என்பவர் முன்னர் எல்லைப்புறக் கலகக்காரர்களை யெல்லாம் அடக்கும் பொருட்டுப் படையெடுத்துச் சென்றதைக்கண்ட அந்த அரபிகள் அதிகமான பரபரப்பைக் கொண்டார்கள். இதனால் ஷாம் தேசத்திலிருந்த ரூம் தேச வாசிகள் இந்த நூதன முஸ்லிம்களின் மீது அதிகமான அருவருப்பும் அசிசையும் கொண்டார்கள். இதன்காரணமாக அவர்கள் பல்கா என்னுமிடத்தில் பெருந்திரளான சேனையொன்றைச் சேகரம் செய்து வைத்தார்கள். இஸ்லாமிய ராஜ்யத்தின் எல்லைப்புறத்துக்கு வெளியில் ரூம்தேசவாசிகள் பெரிய தொரு சேனையைத் திரட்டி வைத்துக் கொண்டிருப்பது முஸ்லிம் ராஜ்யத்துக்கு எப்பொழுதும் அபாயத்தையே விளைக்குமெனக் கண்ட கலீபாசர் அந்த உரோமரின் படையை ஒழித்துவிட வேண்டுமெனத் தீர்மானித்தார். உடனே அதற்கு வேண்டிய சேனைகளையும் மற்றுமுள்ள சாமக்கிரியைகளையும் ஆயத்தம் பண்ணி அவ்வட தேசத்தை நோக்கி அனுப்பினார்.

அக்காலத்தில் பலஸ்தீனமென்று சொல்லப்பட்டுவந்த தேசமானது கார்மல் மலைக்கும் கலிலேயாவின் ஏரிக்கும் தெற்கில் உர்தான் (யோர்தான்) நதியிலிருந்து மத்திய தரைக்கடல் மட்டும் நீண்டிருந்தது. இத்தேசத்திலுள்ள பெய்சேரியா பெரூஸலம் ஜாபா முதலிய பல முக்கியமான பட்டணங்களில் உரோமர்களின் ராணுவப்படைகள் மிகுதம் சேமித்து வைக்கப்பட்டிருந்தன மேலும் ஸைகர் என்னும் பட்டணமும் அதைச் சூழ்ந்துள்ள பாகமும் பல

ஸ்தினத்துக்குக் ட்டுப்பட்டிருந்தன. உர்தூன் நதிக்கு வடக்கேயிருந்த உர்தூன் பிராந்தியத்தில் ஸூர் ஏக்கர் முதலிய பட்ட ணங்களிலும் உரோமரின் சேனைகளே திரட் டப்பட்டிருந்தன. பலஸ்தீன நாட்டுக்கு வடக்கே தான் ஷாம் தேசம் (பர்ருஷ்ஷாம்) என்னும் ஸிரியநாடு அமைந் திருந்தது; அதிலிருந்த அலெப்போ திமிஷ்கு, ஆண்ட் டியாக், எமஸ்ஸா முதலிய பட்டணங்களிலும் அந்த உரோ மர்களின் தளங்கள் மிகுதமா நிரப்பப்பட்டிருந்தன. கலிலேயா ஏரிக்குத் தெற்கிலும் உர்தூன் நதிக்குக் கிழக் கிலும் ஹௌரான் என்று சொல்லத்தக்க மேட்டு நில ள் ரணப்பட்டன.

இப்படிப்பட்ட ஷாம் தேசத்தை நோக்கி அபூபக்கர் ஸித்திக் (ரலி) அவர் ளால் அனுப்பப்பட்ட சேனையானது முதலில் சென்று உரோமரின் கையில் அதி மான தோல் வியையடைந்தது ஆயினும் அதை கேட்டு, கலீபாசர் சிறி துப் மனந்தளராமல் மறுபடியும் நான்கு சேனைகளைச் சேர் த்து நான்கு தளபதியின் கீழ் அனுப்பிவை த்தார். தாக்ஷண் யமும் தயாளகு மும் மிகுந்துள்ள அபூ உபைதா (ரலி) வின் கீழ் அனுப்பப்பட்ட சேனையானது ஜாபியா என்னுமி டத்தில் தங்கியிருந்து ெ ா டு எமஸ் ா என்னும் பகுதி யை நோக்கிச் சென்றது. இதில் மதீனாவின் முஸ்லிம் களும் நபிகள் நாய த்தின் தோழர் ளும் நிரம்பியிருந்தார் ள். அம்ரிப்னுல் ஆஸ் (ரலி) அ ர் ளுடைய தலைமையின் கீழ்ச் சென்றபடையான பலஸ்தீனத்தை நோ கிச் செலுத்தப் பட்டது. திமிஷ்கு ந ரை நோ ச் சென்ற முஸ்லிம் படை யானது இஸ்லாத்தின் பழய விரோதியாகிய அபூஸுப்பி யானுடைய குமாரர் எஜீத் எ ப ருடை ய தலைமையின் கீழ் அனுப்பப்பட்டது. இ ருடைய சேனையில் இஸ்லாத்

தின்பழைய விரோதிகள் பலரும் மக்கத்துப் பெரியமனிதர்கள் அதிகம்பேரும் திஹாமாவின் அரபிகள் பெரும்பான்மைபேரும் நிரம்பியிருந்தனர். மற்றொருபடையானது உர்தான் பிரதேசத்தை நோக்கி ஷுராபீல் என்னும் தளபதியின்கீழ் அனுப்பப்பட்டது. இக்கான்குமல்லாமல் மற்றொருசேமப்படையானது அபூஸுபியானுடைய இரண்டாவது குமாரராகிய முஆவியா (ரலி) அவர்களுடைய தலைமையின்கீழ்ச் சேமித்து வைக்கப்பட்டிருந்தது. ஆனால் வடக்கேசென்ற நான்கு தளபதிகளும் ஒருவரையொருவர் ஆதரித்துக்கொண்டு உரோமரின் படையைச் சூழ்ந்து நெருக்கமாக வந்துகொண்டிருந்தார்கள். இவர்களுடைய தாக்குதலால் ஜெரூஸலம், கஸா, பஸ்ரா, திமிஷ்கு முதலிய நகரங்களெல்லாம் முஸ்லிம்களுடைய கைவசமாக ஆய்விடுமென்று நம்பும்படியான நிலையில் உரோமர்களின் மனத்தை உருத்தலைப்பட்டது. ஆயினும் முஸ்லிம் படைகளின் முப்பதினாயிரம் போர்வீரர்களும், உரோமராஜ்யத்தின் சேனாசமூகத்தையும் அவர்களுடைய யுத்த முஸ்தீபுகளையும் நோக்கும்போது ஒரு மகா சமுத்திரத்துடன் எதிர்க்கத்துணிந்த ஒரு சிற்றாறுபோல் காணப்பட்டனர். ரூம்தேசத்தின் தேசப்பெருக்கும் அதன் நிலவளமும் நீர்வளமும் வருமானமிகுதியும் ஆட்பலமும் செல்வாக்குமிகுதியும் உரைத்திட்டுச் சொல்லமுடியாத விதமாய் அவ்வளவு மலிந்து கிடந்தன. அப்படிப்பட்ட உரோமருடன் எதிர்க்கத்துணிந்த அரபிகளின் நிலைமையானது மலையை எதிர்க்கத்துணிந்த ஒரு மசகம் போலாயிருந்தது. அப்பொழுதிருந்த உரோமராஜ்யத்தில் சின்ன ஆசியாவென்னப்படும் ஒரு பெரியதேசமிருந்து வந்தது; இதில் அயல்நாடுகளுடன் வர்த்தகம் செய்யத்தக்க பெரும்பெரும் கடற்றுறைப்

பட்டின கவெல்லாம் இருந்து ந்தன. ஆபிரிக் ாவிலிரு ந்த எகிப்து தேசமும் அ கிருந் தோ கிவந்த பண்டை க் கால நா ரி வுல மென்னப்பட் கார்த்தேஜ ம் கைரி னும் அந்த உரோம ஆட்சியின்கீழ் அமைந்திருந்தன. இவையன்றி இன்னும் ஷாம் பலஸ்தீனம் பினீஷியா முத லிய நாடுகளு அதில் சேர்ந்திருந்தன. இப்படிப்பட் ரும்தேசத்தாரு ன் அராபி முஸ்லிம் ள் சிலர் எதிர்த்து நின்று யுத்தம்புரியத் துணிந்து முன்வந்தார்கள்.

இப்படிப்பட் துணிவுள்ள அரபிகளை நசுக்கும்பொ ருட்டு ஹெர் கியூல் என்னும் அரசனே நேரில்வந்து எமஸ் ஸாஎன்னுமிடத்தில் தங்கியிருந்துகொ டு அராபிப்படை களைநோக்கி நான்குசேனைகளை நான்குபுறத்துக்கும் அனுப் பினன். அதை அதிசீக்கிரம் தெரிந்துகொண்ட அராபிய தளபதி ள் த ளுடைய சேனைகளை யெல்லாம் ஒன்று சேர்க் வே டுமென்னும் எ த்தினுல் ஹயரோமாக்ஸ் என்னும் ஆற்றோரத்திலுள்ள ெ ளலான் என்னுமி த்தில் ஹிஜ்ரி 13-ம்ஆ டு ஸபர்மாதத்தில் கொ டுவந்து சேர்த் தார் ள். இதையறிந்த ரோமர் ளும் த ளுடைய சேனை யையும் ஒ ரு த் திரட்டினர் ள். ஹயரோமாக்ஸ் என்பது ர்தா நதியுடன் ந்து கல க கூடிய ஒரு சாதார மான ஆருயிரு கிறது. இந்தஹயரோமா உர்தான் நதியுடன் லப்பதற்குமுன் முப்பதா து மைலில் அதுவடக்கு ரையோரத்தில் சுரு குப் போட்டாற்போல் ஒரு ட்ட டி ா ச்சுழன்று ருகிறது. இவ் ாறு அந்நதியால்சூழப் பட்ட இடத்திற்குள் ஒரு பெரிய சைன்யமானது படை வீடு செய்யத்த அவ் ளவு விசாலமான நிலப்பரப் பொ று ா ப்படுகிறது. இவ் ாற்றின் ரை ளி ா டும் ாடு மூரடான ற் ளாலமை ப்பட்ட செ

